

ஓவியம்: சிதம்பர கிருஷ்ணன்

ஒரு வல்லின மாத ஏடு

# கசடதபற

ஆசிரியர்: நா. கிருஷ்ணமூர்த்தி

1 தேவடி தெரு
சென்னை 4

7

ஏப்ரல் 1971

30 காசு

# சமுதாய யதார்த்தச் சித்தரிப்பு

அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தின் மொழியியல் கூட்டத்தில் பிப்ரவரி 25, 1971 தேதியன்று டாக்டர் ஆல்பர்ட் பி. ஃபிராங்க்ளின் **Depiction of Social Reality in Contemporary Tamil Fiction** என்ற தலைப்பில் உரையாற்றினார். பின்னர் கேள்விகளுக்குப் பதில் அளித்தார். அந்நிகழ்ச்சி பற்றிய தொகுப்புரை இது.

(டாக்டர் ஃபிராங்க்ளின் ஒருமொழி வளர்ச்சியியலாளர் (Philologist). அமெரிக்க அரசாங்க வெளி உறவுத்துறையில் சில ஆண்டுகள் பணிபுரிந்த பிறகு மீண்டும் கல்வித்துறைக்குத் திரும்பியவர். சென்னையில் அமெரிக்கன் கான்ஸல்-ஜெனரலாக ஐந்து ஆண்டுகள் பதவி வகித்தவர். தற்போது கான்ஸாஸ் ஸ்டேட் பல்கலைக் கழகத்தின் தென்னாசியக் கூடத்தின் நெறியாளராகப் பங்கேற்று வருகிறார். அமெரிக்கன் இன்ஸ்டிடியூட் ஆஃப் இண்டியன் ஸ்டடீஸ் ஸ்தாபனத்தின் 'ஃபெல்லோ'வாகத் தென்னிந்தியாவில் தற்காலத் தமிழ் இலக்கியத்தில் ஆராய்ச்சி புரிந்து வருகிறார்.)

தற்காலத் தமிழ்ப் புனைகதையில் சமுதாய யதார்த்தச் சித்தரிப்பு—டாக்டர் ஃபிராங்க்ளின் முதலில் தன் தலைப்பிற்கு விளக்கம் தந்து உரையைத் துவக்கினார். 'சமுதாய யதார்த்தச் சித்தரிப்பு' (Depiction of Social Reality) என்பது, சமுதாயம் தன்னைத் தானே நன்கறிந்து கொண்டால் களை நீக்கப்பட்டுச் சீர்ப்படும் என்ற நோக்கத்துடன் ஒரு எழுத்தாளன் தன் எழுத்தினால் சமுதாயத்தின் முன் கண்ணாடி யொன்றைக் காட்டுவதுபோல எழுதுவது. இந்த யாதார்த்தச் சித்தரிப்பில் ஒரு எழுத்தாளன் அவனுடைய நோக்கம் பற்றி உணர்வுடனோ உணர்வில்லாமலோ செயல்பட்டால்கூட அவன் எழுத்தின்பயன் சமுதாயம் தன்னைத் தானே கண்ணாடியில் பார்த்துக் கொள்வதற்கு நிகராகும். 'தற்காலத் தமிழ்ப் புனைகதை' (Contemporary Tamil Fiction) என்றுதான் கூறுவது இந்திய சுதந்திரத்திற்குப் பின்வந்த படைப்புகளைக் குறிப்பதாகும் என்று டாக்டர் ஃபிராங்க்ளின் கூறினார்.

அதாவது, இப் படைப்பாளிகள் அநேகமாக நாற்பது வயதுக்குட்பட்டவர்களாக இருப்பார்கள். மேல்நாட்டு இலக்கியத்தில் சமுதாய யதார்த்தச் சித்தரிப்பு ஒருபெரும் இயக்கமாக டிக்கன்ஸ், பால்ஸாக், கார்க்கி, ஃபாக்னர் போன்றோருடைய படைப்புகளால் உருப்பெற்றது இவர்கள் மக்களையும் அவர்கள் சூழ்நிலையையும் இருப்பது போலவே சித்தரித்து (சில தருணங்களில் கேலிச் சித்திரமாக மிகைப்படுத்திச் சித்தரித்து) அத்துடன் அவர்களுடைய அன்றாட வாழ்க்கையில் உபயோகிக்கக்கூடும் மொழியையும் பெருமளவுக்குக் கையாண்டார்கள்.

அன்றாட வாழ்க்கையில் மக்கள் புழங்கும் மொழியைக் கொண்டு இலக்கியம் படைப்பதில் படைப்பாளிக்கு இலக்கிய அமைப்பு பற்றிய ஒரு தனிப் பார்வை தெளிவாகிறது. ஐரோப்பாவிலும் அமெரிக்காவிலும் சமுதாய யதார்த்தச் சித்தரிப்புக்குப் பரவலாக இலக்கிய அந்தஸ்து கிடைத்த கால கட்டம் 'அச்செழுத்து மனிதர் காலம்' (The Age of Typographic Man*) என்று மார்ஷல் மக்லூகனால் அழைக்கப்பட்ட காலம். மனித கலாச்சார வளர்ச்சியில் இக்காலகட்டத்தில் அச்சிடப்பட்ட தாள் மனிதன் அறிவைப் பெருக்கிக் கொண்டு மொழி நடையழகை ரசிக்கும் சாதனமாகும். அதற்கு முந்திய காலகட்டத்தைச் சேர்ந்த 'கையெழுத்து மனிதன்' (Scribal Man) காலத்தில், எழுதப்பட்டதை மனப்பாடம் செய்வதும், நடையின் இலக்கண ஒழுங்கு, அமைப்பு சரியாயிருப்பது—இவையே பெரிதெனக் கருதப்பட்டது (இப்போது மேல்நாட்டில் 'டைப்போகிராபிக் மனிதன்' காலம் முடிந்து எலக்ட்ரானிக் சாதனங்கள் காலம் இடம் பெற்றிருக்கிறது. தமிழைப் பொறுத்தவரையில், பொதுவாகச் சொல்லப்படுவதின் உட்கருத்து, உணர்ச்சி, கலைநயம் இவைகளினும் வாக்கியங்களின் அமைப்பு சரியாயிருத்தலில் கவனம் அதிகம் காணுவதிலிருந்து இன்றைய தமிழர் காலம் 'கையெழுத்து மனிதன்' காலம் என்பதற்கு அறிகுறிகள் தென்படுகின்றன ஆதலால் சமுதாய யதார்த்தத்தைச் சித்தரிக்கும் இளம் தமிழ் எழுத்தாளர்கள் 'டைப்போகிராபிக் மனிதன்' கலாச்சார காலத்தை ஒட்டியவராயிருந்தும் அவர்களுடைய சூழ்நிலை இன்னொரு கலாச்சாரத்தைச் சார்ந்ததாயிருக்கும் ஒரு விசேஷ நிலையிருப்பதாகக் கொள்ளலாம்.)

மிகத் தொன்மையான காலத்திலிருந்தே படைப்பிலக்கியத்திற்கு அந்த பொருள், நோக்கம், பாத்திரங்கள் முதலியவை பற்றித் திட்டவட்டமான வரையறைகள் தமிழில்இருந்து வருவதை டாக்டர் ஃபிராங்க்ளின் குறிப்பிட்டார். வரையறைகளின் நெடுநாள் மரபை எண்ணிப் பார்க்கும்போது சமூகத்திற்கு அதையே சுட்டிக் காட்டுவதையொத்த சமுதாய யுதார்த்தச் சித்தரிப்பு தமிழில் சாத்தியம்தானா என்ற கேள்வி எழுந்தது எவ்வாறாயினும், உலக இயக்கங்கள், குறிப்பாக உலக அறிவாற்றல் இயக்கங்களால் பாதிக்கப்படும் ஒரு தமிழ் எழுத்தாளன், அதிலும் கலைஞனாயிருப்பவன், வரையறைகளைத் தடைகளாகவே கருதக்கூடும்.

அப்படிப்பட்டதொரு உலகக் கலைஞன் புதுமைப்பித்தன் டாக்டர் ஃபிராங்க்ளின் தற்காலத் தமிழ் இலக்கியத்தின்மீது ஆர்வம் கொண்டு கற்க முடிவெடுத்ததற்குக் காரணமே அவர் புதுமைப்பித்தனின் 'அன்றிரவு' கதையைப் படிக்க நேர்ந்ததுதான்.

இங்கு தாற்காலிக அபிப்பிராயத்தைக் கூறுவதற்கு மன்னிப்புக் கோரி டாக்டர் ஃபிராங்க்ளின் புதுமைப்பித்தனே இந்த நூற்றாண்டின் தலை சிறந்த எழுத்தாளனாக இருக்கக்கூடும் என்று தான் கருதுவதாகக்கூறினார். ஆனால் புதுமைப்பித்தன் வாழ்நாளிலும் அல்லது அவர் மறைந்த பிறகும் அவருக்கு எப்பரிசோ விருதோ அளிக்கப்பட்டதாகத் தெரியவில்லை. இதற்குக் காரணம் புதுமைப்பித்தன் சர்வதேச அறிவாற்றல் இயக்கங்களில் ஆழ்ந்த அக்கறை காட்டிய

---

* Marshall H. Mc Luhan, The Gutenburg Galaxy, University of Toronto Press, 1962; reprinted London, Routledge and Keagan Paul, 1957.

தும் அந்த அக்கறை அவருடைய எழுத்தில் பிரதி பலிக்கப்பட்டதுமாக இருக்கக்கூடுமோ என்று டாக்டர் ஃபிராங்க்ளின் எண்ணினர்.

டாக்டர் ஃபிராங்க்ளின் இன்று தான் மேற்கொண்டிருக்கும் ஆராய்ச்சியின் பயனாக ஒரு குறிப்பிடத்தக்க இளம் எழுத்தாளர் குழு தற்கால சமுதாய யதார்த்தத்தைத் திறமையுடனும் ஆழ்ந்த பார்வையுடனும் விமர்சனப் பூர்வமாகவும் எழுத முயலுவதைக் காண முடிகிறது என்றார்.

இதற்கு ஊர்ஜிதம் காணும் வகையில் க.நா. சுப்ரமணியத்தின் விமரிசனக் கட்டுரைகள், குறிப்பாகத் 'தீபம்' பத்திரிகையில் வந்த ஒரு கட்டுரை (தீபம்—ஏப்ரல் 1969) இருப்பதைக் கூறினர். அவர் ஒரு பட்டியலோ வரிசையோ தரப்போவதில்லையாயினும் இந்த இளம் எழுத்தாளர்கள் தரமாக, திறமையாக, பல தருணங்களில் உருக்கமாக சக்திவாய்ந்த எழுத்தாகப் படைப்பதை அவர் காண முடிந்திருக்கிறது. பொதுவாகத் தமிழில் விமரிசனத்துறை குறைபாடுபட்டிருக்கிறது; விமரிசகர்கள் தங்கள் குறிப்புச் சொற்களுக்குச் சரியான விளக்கம் தராமல் எழுத்தாளர்களை மிகையாகப் பாராட்டுகிறார்கள்; அல்லது 'நல்ல எழுத்தாளர்கள்' 'மோசமான எழுத்தாளர்கள்' என்று அவ்வடைச் சொற்களுக்கு விளக்கமளிக்காமல், ஒரு எழுத்தாளனின் தனிப்பார்வை, சிறப்பு அல்லது குறைகளை எடுத்துக் கூறப் போதிய அளவு கவனம் செலுத்தாமல் எழுத்தாளர் பட்டியல்கள் தருவதோடு திருப்தியடைந்து விடுகிறார்கள். ஒரு பட்டியலில் காணும் ஒரு பெயர் ஒரு தனிக் குழுவையே குறிப்பதாக இருந்தது. அதன்மூலம் மற்றவர்கள் அதிருப்தியடையச் செய்யும் வண்ணம் பல தருணங்களில் இப்பட்டியல்கள் சதிசெய்வது போலத் தோன்றுவதுண்டு.

இந்தச் சூழ்நிலையில் பாராட்டியோ கண்டனம் தெரிவித்தோ ஒரு பெயரைக் கூறுவதனல்கூட ஒரு விமரிசனக் கட்டுரையின் உண்மையான உட்பொருள் போதிய கவனம் பெறுமல் போவதற்கு இடமுண்டு. உயர்ந்தது, தாழ்ந்தது என்பது போன்ற வரிசையொன்றுமில்லாமல், தான் மனதில் கற்பித்துக்கொண்டிருக்கும் சமுதாய யதார்த்தச் சித்தரிப்புக்கு அடையாளமாக ஒரு படைப்பைப் பெயர் சொல்லிக் கூற அங்குக் குழுமியுள்ளோரிடம் டாக்டர் ஃபிராங்க்ளின் அனுமதி பெற்றபின் அசோகமித்திரனின் 'கரைந்த நிழல்க'ளை எடுத்துக் கூறி, அவர் தற்சமயம் அது போன்ற படைப்புகளையே ஆராய்ந்து வருவதாகத் தெரிவித்தார்.

இந்த இளம் எழுத்தாளர்களுக்கு வாசகர் ஆதரவு இல்லாதது குறித்து டாக்டர் ஃபிராங்க்ளின் கவலை தெரிவித்தார். இவ்வெழுத்தாளர்கள் ஃபார்முலா (Formula) எதையும் பின்பற்றி எழுதாத காரணத்தால் அதிக விற்பனையுள்ள பத்திரிகைகளில் இடம் பெறுவதில்லை. இதற்கு விதிவிலக்குகள் இல்லாமல் போவதில்லை என்று வேறொரு சந்தர்ப்பத்தில் அவர் குறிப்பிட்டதை டாக்டர் ஃபிராங்க்ளின் கூறினர்.

இந்த இளம் எழுத்தாளர்கள் தங்கள் படைப்புகளை வெளியிட அவர்களே பொருளீடுசெய்ய வேண்டியிருக்கிறது. மிகவும் சிரமமான பொருளாதார நிலை கொண்டிருந்தும் எச்சமயத்திலும் ஒரு வெளியீடாவது இயங்கிக் கொண்டிருக்கும் 'நடை', 'கசடதபற' போன்ற சிறு இலக்கியப் பத்திரிகைகளில்தான் இவர்களுடைய படைப்புகள் காணப்படுகின்றன. மிகச் சில விதிவிலக்குகள் தவிர, பெரும் பத்திரிகைகளில் வருபவைக்கு மாருக இச்சிறு இலக்கியப் பத்திரிகைகளில் பிரசுரமாகும் விஷயங்கள் உயிர்த்துடிப்பும் கற்பனை வீச்சும் கொண்டதாக இருப்பது இன்றைய தமிழ் இலக்கிய உலகின் குறிப்பிடத்தக்க அம்சமாகும். ஆனல் இச் சிறு பத்திரிகைகளின் பிரதிகள் மனம் குன்றும் வகையில் மிகக் குறைந்த எண்ணிக்கைதான் விற்பனையாகின்றன. உண்மையில் இப்பத்திரிகைகள் எவ்வளவு பிரதிகள் விற்பனை என்று கணக்குப் பார்ப்பதைவிட ஓர் அச்சகம் குறைந்த பட்ச எண்ணிக்கையாக எவ்வளவு பிரதிகள் மட்டுமே அச்சிட ஏற்கும் என்ற சூழ்நிலையில் இயங்குகின்றன.

இந்த நிலைக்கு இரு காரணங்கள் தோன்றுவதாக டாக்டர் ஃபிராங்க்ளின் கூறினர். ஒன்று, இப் பத்திரிகைகளில் வரும் படைப்புகள் ஓரளவு கல்வித் தேர்ச்சியுடையவருக்கு ஏற்றது போலத்தான் எழுதப்படுகின்றன; ஆனல் அந்த அளவு கல்வியாற்றல் உள்ள தமிழர்கள் தங்கள் பொழுதுபோக்குப் படிப்பு அனைத்தையும் ஆங்கிலத்தில்தான் படிக்கிறார்கள். இன்னொரு காரணம், மற்றெல்லாவிடங்களைப் போலத் தமிழ் நாட்டுப் பெரும் பத்திரிகைகளும் இந்த இளம் எழுத்தாளர்களின் புதுமை முயற்சிகளுக்காகத் தங்கள் பத்திரிகைச் சாதனங்களில் இடமளிப்பது பயனற்ற தியாகமாகும் என்று கருதுகின்றன.

இப்பெரும் பத்திரிகைகளின் ஆசிரியர்கள் வரவு-செலவுக் கணக்கை முக்கியமாக மதிக்க வேண்டிய வர்த்தகத் துறையைச் சேர்ந்தவர்கள் என்று கூறுவது நியாயமாகும். இவ்விரு காரணங்களுடன், கல்வி வசதி பெற்றவர்களிடமும்கூட 'மொழித் தூய்மை' என்ற ஆர்வம் தீவிரமாக இருப்பதும் இவ்விளம் எழுத்தாளர்கள் பெருமளவு வாசகர்கள் பெற்றிராமல் இருப்பதற்குக் காரணமாகும். தன்னுடைய தற்போதைய ஆராய்ச்சி வளர்ந்திருக்கும் அளவில் இதுபற்றித் தீர்மானமாகக் கூற இயலவில்லை என்று டாக்டர் ஃபிராங்க்ளின் தெரிவித்தார். ஒரு பழைய பிரச்னையும் இங்கு எழுகிறது: தன்னுடைய கலை நாணயத்தைப் பறி கொடுக்காமல், அதே சமயத்தில் பரவலாக வாசகர்களை எட்டவேண்டும் என்பதற்காக ஒரு எழுத்தாளன் எந்த அளவுக்குச் சந்தர்ப்ப சூழ்நிலையின் நிர்ப்பந்தத்திற்கு இணங்க வேண்டும்?

மிகச் சிலரே படிக்கும் இந்தப் புதுமை எழுத்தாளர்களின் நிலையை விவரிக்கையில் டாக்டர் ஃபிராங்க்ளினுக்கே ஒரு கேள்வி எழுந்தது: இந்த எழுத்தாளர்கள் முக்கியமானவர்கள்தானு? இக்கேள்வியை அவருடைய விருந்தினராக வந்திருந்த ஒரு பிரெஞ்சு விமரிசகரும் பத்திரிகையாளருமான

---

## வெப்பம்

நீரோடு கோலம் காணு
நிலைப் படியும்
நெளிந்தாடு சேலையில்லாத்
துணிக் கொடியும்
மலரவிட்டு தரை உதிர்க்கும்
பூச் செடியும்
வாளியும்
கிணற்றடியும்
துவைக்கும் கல்லும்
வரளுகின்றன—என்னைப் போல்
அவளில்லா வெறுமையில்.

—பாலகுமாரன்

நண்பரிடம் டாக்டர் ஃபிராங்க்ளின் கேட்டார். அதற்கு அந்த விமரிசகர் அளித்த பதிலாவது :

> "விமரிசனப் பூர்வமான சமுதாய யதார்த்தச் சித்தரிப்பு என்னும் ஒரு முக்கிய இலக்கிய வளர்ச்சிக்கு ஒரு சமூகம் அனுமதியோ ஆதரவோ தராது போனால் அந்த மொழியே சமஸ்கிருதத்தைப் போல ஒரு இறந்த மொழியாகிக் கொண்டிருக்கிறதா என்றுதான் நாம் கேட்க வேண்டியிருக்கிறது".

ஆனால் தமிழ் போன்ற துடிப்புள்ள ஒரு மொழிபற்றி டாக்டர் ஃபிராங்க்ளினுக்கு அவ்வளவு அவநம்பிக்கை கொள்ள இயலவில்லை.

அடுத்து ஒரு கேள்விக்குப் பதில் அளிக்கையில் பண்டைய தமிழ் இலக்கியத்தில் ஒருவித சமுதாய யதார்த்தச் சித்தரிப்பு இருக்கத்தான் செய்கிறது என்று டாக்டர் ஃபிராங்க்ளின் கூறினர். இன்னும் ஒருபடி மேலே போய், இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே இல்லற சமூகத் தகவல்களை நுணுக்கமாகச் சித்தரிக்கும் சிறப்பான பழக்கம் வேறெந்த மொழியிலக்கியத்திலும் இருந்திருக்க முடியாது என்ருர்.

ஆனல் அவர் இப்போது எடுத்துக்கூறும் விஷயம் அதல்ல. பண்டைய தமிழ் இலக்கியத்தின் அந்த அழகிய படைப்புகள் அக்காலகட்ட நிலையை இடித்துக் கூறும் வண்ணமோ குறைகளை எடுத்துக்கூறும் வண்ணமோ இல்லை. பண்டைய தமிழ் எழுத்தாளர்களை 'சினமுற்ற இளவயதினர்' (angry young men) என்று கூற முடியாது. மாருக, சங்க காலத்துச் சமுதாய யதார்த்தம் அக்காலத்து ஆசிரியர்களையும் கவிஞர்களையும் உற்சாகம் கொள்ளக் கூடியதாகவே இருந்ததாகத்தான் காணப்படுகிறது.

இன்னெரு கேள்விக்குப் பதிலளிக்கையில் டாக்டர் மு. வரதராசனர் அவருடைய நாவல்களில் சமுதாய யதார்த்தத்தைக் கையாண்டிருக்கிருர் என்றே டாக்டர் ஃபிராங்க்ளின் அபிப்பிராயப்பட்டார். இலக்கிய நிபுணர்களை ஐயத்தில் ஆழ்த்துவது பெரும்படைப்பாளிகளின் சிறப்பாகும்; மு. வ. திறமையாகத் தற்காலச் சமுதாய, மனேதத்துவ யதார்த்தத்தை ஒரே சீரான, அழகான, தூய தமிழில் சித்தரித்திருக்கிருர். இப் படைப்புகளின் நேரடிப்பாதிப்புபற்றி இப்படி ஒரு கேள்வி எழக் கூடும்: இவைகளைப் படிக்கும் சமூகம் தன்னைத்தானே இவற்றில் கண்டு கொள்ள முடியுமா? தூய நடை மொழியாடலே ஒரு வகையில் நம்மை நாமே பாராட்டிக் கொள்ளும் மயக்கமாகாதா? இக் கேள்விக்கு ஒரே தீர்மானமாகப் பதிலளிக்க முடியாது. பல கோடி அமெரிக்கர்களுக்கு அவர்களுடைய குரூரமான சமுதாய யதார்த்தத்தை ஜேம்ஸ் பால்ட்வின் அழகான, இலக்கண சுத்தமான, காவிய நடைஎன்று கூறக் கூடிய நடை கொண்டுதான் உணர்த்தியிருக்கிருர். ஆனல் அது சாத்தியமானதற்கு அதே சமுதாயப் பிரச்னையை அதே சமயத்தில் வேறு பல எழுத்தாளர்களும் அன்ருடப் பேச்சு வழக்கு கொண்டு தீவிரமாக எழுதியிருப்பது காரணமாயிருக்கலாம். எதற்கும் மொழியைக் கையாளும் பிரச்னையில் சில பொது விதிமுறைகள் நிறைவேற்றப் பட்டிருக்கின்றனவா என்று பாரப்பதைக்காட்டிலும் ஒரு படைப்பாளி தன் முழுப்படைப்பைக் கொண்டு எத்தகைய கலையனுபவத்தை உணர்த்த முற்பட்டிருக்கிருர் என்று பரிசீலிப்பதில்தான் விடை காண முடியும் என்று தனக்குத் தோன்றுவதாக டாக்டர் ஃபிராங்க்ளின் கூறினர். இதெல்லாம் கூறுவதற்குக் காரணம் தன் கலாச்சாரக் குழு 'கையெழுத்து மனிதன்' குழுவைக் காட்டிலும் 'அச்செழுத்து மனிதன்' வகையைச்சேர்ந்ததென்றும் அவர் 'புக் ஆஃப் ஹவர்ஸ்' (Book of Hours)ஸாக்கு ஜான் டாஸ் பாஸோஸைப் படிப்பதைத் தேர்ந்தெடுப்பாரென்றும், ஆக மொத்தத்தில் அவருடைய விருப்பு வெறுப்புகள் ஒரு 'டைப்போ கிராபிக் மனித'னின் விருப்பு வெறுப்புகளாகவே அமையும் என டாக்டர் ஃபிராங்க்ளின் கூறினர்.

இன்னெரு கேள்விக்குப் பதிலளிக்கையில், டாக்டர் ஃபிராங்க்ளின் புதுமைப் பித்தனை ஒரு 'நலிவுற்ற மேதை' (a morbid genius) என்று ஒத்துக் கொள்வதாகக் கூறினர். தொடர்ந்து பேசுகையில், புதுமைப் பித்தன் எழுதிய காலம் உலகெங்கும் தீவிர ஆத்ம விசாரமும் (selfquestioning) சோர்வும் நிரம்பிய காலம் எனபதைமனதில் கொள்ளவேண்டும் என்ருர். புதுமைப்பித்தன் உலகெங்கும் நிகழும் கலாச்சார அறிவுத் தத்துவ இயக்கங்களை நன்கு படித்தறிந்ததோடல்லாமல் அவைகளை மொழி பெயர்க்கவும் செய்திருக்கிருர் கடந்த நூருண்டுகளின் மேதைகளைப் போலப் புதுமைப் பித்தனும தன் சமகால மனிதவர்க்கத்தின் பேதைமை குறித்துப் பெரும் ஏக்கம் கொண்டிருந்தார். 'நலிவுற்ற மேதைகள்' என்று கூறும்போது ஆண்ட்ரி ஜுட், உனமுனே, ஒட்டேகா இ காஸெட், ஜார்ஜ் லூயி போர்ஜஸ், காமு, பாஸ்டர்நாக், ஸால்ஸினிட்ஸின், ஃபாக்னர், காஃப்கா போன்ற மகத்தான எழுத்தாளர்களின் பட்டியல் நீண்டு கொண்டே போகிறது. விமரிசனப் பூர்வமாக 'நலிவுற்ற' (morbid) என இங்கு கூறுவது பிழையுள்ளதும் செல்லுபடியாகாததுமாகும். புதுமைப்பித்தன் ஒரு கதை சொல்லுபவர் என்று மட்டுமல்லாமல் ஒரு தத்துவ ஞானியாகவும் இருந்திருக்கிருர்.

கவிதையே ஒரு 'செயற்கை' மொழியாயிற்றே— அது சமுதாய யதார்த்தச் சித்தரிப்புக்கு உகந்ததாக முடியுமா என்று ஒரு கேள்வி கேட்கப்பட்டது. அதற்குப் பதில் கூறுகையில் டாக்டர் ஃபிராங்க்ளின் தற்போது அவர் கவிதையாராய்ச்சியில் ஈடுபட்டிருக்கவில்லையாயினும் 'புதுக்கவிதை' எனக் கூறப்படுவதை தாம் கவனித்திருப்பதாகக் கூறினர். ஞானக்கூத்தன் எழுதிய 'கீழ்வெண்மணி' என்ற கவிதையை அவருடைய பல்கலைக் கழகப் பிரசுரத்திற்காக ஆங்கிலத்தில் மொழி பெயர்த்திருக்கிருர். தற்காலத் தமிழ்க் கவிதையில் சமுதாய யதார்த்தச் சித்தரிப்பு முயற்சியாக இக் கவிதையை ஓர் உதாரணமாக எடுத்துக் காட்டினர்.

இறுதியாக, சமுதாயயதார்த்தச சித்தரிப்பு மற்ற இந்திய மொழிகளில் எந்நிலையில் உள்ளது என்று ஒரு கேள்வி கேட்கப்பட்டது. இதற்குப் பதிலளிக்கையில் ஆதாரமுள்ளவை என்று அவர் நம்பும் வகையில் டாக்டர் ஃபிராங்க்ளினுக்குக் கிடைத்த தகவல்களிலிருந்து பிற தென்னிந்திய மொழிகள் புதுமை எழுத்துக்குச் சாதகமான சூழ்நிலையளித்து, அதன் மூலம் சமுதாய யதார்த்தச் சித்தரிப்பு கொண்ட எழுத்துக்களுக்கும் அப் படைப்பாளிகளுக்கும் இடமளித்து, அதன் மூலம் முன்னேற்றம் கண்டிருப்பதாகக் கூறினர். உதாரணமாக அனந்தமூர்த்தியின் 'ஸம்ஸ்காரா' கன்னட நாவலின் வெற்றியையும் அந் நாவலைக் கொண்டு எடுக்கப்பட்ட திரைப்படத்தின் வெற்றியையும் குறிப்பிட்டார். இது இலக்கியத்திலும் திரைப் படத் துறையிலும் பொதுவாக ஒரு கலாச்சார முன்னேற்றத்தைக் குறிக்கும் மாறுதலாகவே அவருக்குத் தோன்றியது. கன்னடத்திற்கு மாருகத் தமிழில் ஜெயகாந்தன் எடுத்த திரைப்படம் 'உன்னைப்போல் ஒருவன்' அரசாங்க விருது பெற்ற போதிலும் சராசரித் தமிழ் சினிமா ரசிகர்களால் மிகமிகக் குறைந்த அளவே வரவேற்கப்பட்டது. ஆனல் இதை ஒரு தாற்காலிக ஊகமாகவே எடுத்துக்கொள்ளவேண்டும் என்றும் ஒரு தீர்மானமான கணிப்பாகக்கூறத் தமக்கு உரிமையில்லை என்றும் டாக்டர் ஃபிராங்க்ளின் கூறினர். ●

# நாற்காலிக்காரர்

ந. முத்துசாமி

பாத்திரங்கள்: இருபது நபர்கள்

(திரை தூக்கப்பட்ட இருண்ட மேடையில் மெல்ல ஒளி பரவுகிறது. உள் வலப்புற மூலையில் நாற்காலியில் ஒருவர் உட்கார்ந்திருக்கிறார். அவர்மேல் ஒளி வீசப்பட்டு பின் மங்கலாக்கப்படுகிறது. இப்பொழுது ஒன்பதுபேர் இடப்புற வழியாக மேடையில் வருகிறார்கள். கசமுசாவென்று ஒன்றும் புரியாமல் பேசிக் கொண்டு வருகிறார்கள். ஒருவன் ஆடிக் கசங்கிய சீட்டுக்கட்டைக் கலைத்துக் கொண்டே வருகிறான். வந்த வேகத்தில் தரையில் உட்கார்ந்து நான்கு பேருக்குக் கலைத்தசீட்டைப் போடுகிறான். நான்குபேர் அவற்றைப் பொறுக்கிக்கொண்டு ஆடும்மும்முரத்தில் ஒன்றுகிறார்கள். மற்றவர்கள் அவர்களைக் குழுமிக் கொண்டு முழங்காலில் கையை ஊன்றிக் குனிந்து வேடிக்கை பார்க்கிறார்கள் கசமுசா சப்தம். இதைத் தொடர்ந்து இன்னும் ஒன்பதுபேர் கசமுசா சப்தத்தோடு வலப்புற வழியாக மேடையில் நுழைகிறார்கள். வந்த வேகத்தில் உட்கார்ந்து கோலி விளையாடுகிறார்கள். பிறகு ஒருவன் தனியாக வந்து இடப்புற முன் மூலையில் இடுப்பில் கைகளை ஊன்றிக் கொண்டு கால்களைப் பரப்பி நின்று, இரண்டு விளையாட்டையும் குனிந்தும், நிமிர்ந்தும், தலையைச்சாய்த்தும் வேடிக்கை பார்த்துக் கொண்டிருக்கிறான். சற்றுநேரம் வேடிக்கை பார்த்த பிறகு பேசஆரம்பிக்கிறான்)

வேடிக்கை பார்ப்பவன்: சபாஷ் ரொம்ப நல்ல விளையாட்டு. நல்லா குறிபார்த்து, நல்லா குறிபார்த்து. குண்டுஒடையணும். உடைஞ்சு சிதறணும். போட்டி போட்டி...... பால்குண்டு ஒடையுதா, கண்ணாடிக் குண்டுஒடையுதான்னுபோட்டி. நாங்க சின்னவயசிலே கிராமத்திலே செங்கல் குண்டு செஞ்சு விளையாடுவோம் ஒரே அடி நங்குன்னு...குண்டு தூள் தூள். கற்சட்டி காதிலே குண்டு செஞ்சாமாக்கல் குண்டு. விளையாட்டைவிடக் குண்டு செய்யறது ரொம்ப சுவாரஸ்யமான பொழுதுபோக்கு. யாரும் பம்பரம் கொண்டாரலையா? குத்துப்பம்பரம் விளையாடலாமே. ஏங்கொண்டாரலே? கிட்டிப்புள்ளு. அதுவுந்தான் நல்ல விளையாட்டு நம்ம தேசிய விளையாட்டு. இந்தச் சீட்டுக்கட்டு இந்த தேசத்துக்கு எப்போ வந்துது? ஆனா அதுவுந்தேசீயமா ஆயிடுச்சு.

நாற்காலிக்காரர்: நீ ஏன் இந்த விளையாட்டிலே இவ்வளவு ஆர்வங்காட்டரே. வாயே மூடிக்கிட்டு சும்மா வேடிக்கை பாக்க முடியாதா ஒன்னாலே? நீ காட்டற ஆர்வத்திலே இவங்களுக்கு குஷி பொறந்து பூடுது. நேரங்காலம் இல்லாமே, சாப்பாடு தண்ணி இல்லாமே ஆட ஆரம்பிச்சுடறாங்க. விளையாட்டிலே வெறிபுடுச்சிடுச்சின்னா தலைகால் போறது தெரியாது. வேட்டி வெலகறது தெரியாது ரொம்ப ஆர்வங் காட்டாதே. சும்மா வேடிக்கைபாரு போதும். இதோ நான் பாக்கலே. நானும் இதெல்லாம் கவனிச்சுக்கிட்டுத்தானே இருக்கேன்.

வே. பா: அது எப்படி வேடிக்கை பாத்தா வேகம் வரத்தானே செய்யுது.

நாற்காலிக்காரர்: அது எப்பிடி...எப்படி வேகம்வரும் நிதானமாயிருந்தா வேகம் வருமா?

வே. பா: எங்கே நிதானமா இருக்க முடியுது? மாரியம்மன் கோயில் தீ மொதியிலே வேடிக்கை பாக்கற நமக்கு வேகம் வந்துடலையா? தனல்லே... குண்டு குண்டா கிடக்கிற தனல்லே படுத்து அங்கப் பிரதட்சணம் பண்ணலாம் போல வேகம் வந்துடலே. காவடிக்கொட்டு கொட்டினா கூத்தாடணும் போல இருக்கு 'துவா'ன்னுசாமிவந்து 'வா' விடறானே ...மௌனமா நின்னாலும் நம்ம தொண்டையிலே சத்தங்கேக்கலே. இது இந்த உடம்போட பொறந்தது உடம்போடத்தான் போகும்.

நாற்காலிக்காரர்: இவ்வளவு நல்லா சிந்திக்கறயே கொஞ்சம் நிதானமா இருந்துபாரேன். முடியுதான்னு பாரேன். முடியாதுன்னு முதல்லேயே ஏன் முடிவு கட்டிக்கறே.

வே. பா: சரிதான் போய்யா...ஞாயம் சொல்ல வந்துட்டாரு. ஒன்னாலே சும்மா இருக்க முடிஞ்சுதா? புத்தி சொல்லத் தோணுதில்லே. ஒன்னாலே சும்மா இருக்க முடியாமே ஊரானுக்கு வாத்தியாரா ஆவுறேல்லே. நிதானமா வேடிக்கை பாரு ஓம்பாட்டுக்கு இல்லே வூட்டுக்குள்ளே போயி கதவைச்சாத்திக்க காந்தியாரு கொரங்குமாதிரி காதைப் பொத்திக்க, கண்ணே மூடிக்க, வாயே பொத்திக்க. போ... வூட்டுக்குள்ளே போயி ஓம் பாட்டுக்கு ஆம்படையான் பொண்டாட்டி விளையாட்டு விளையாடு போ. (இங்கு திரும்பி) சபாஷ்... நீங்க ஜமாய்ங்க. சீட்டு மூளைக்கு வேலை கொடுக்கிற ஆட்டம். சில்லறை வைச்சு ஆடணும். சும்மா முன்னூத்தி நாலு தொள்ளாயிரத்தி நாலுன்னு ஆடறதிலே அர்த்தமில்லே. அது என்ன ஆட்டம். நாட்டுப் புறத்தான் ஆட்டம். மத்தியானத்திலே திண்ணை தூங்கிங்க ஆட்டம். காசு வைக்கணும், அதுதான் ஆட்டம். மூளையே காசாலே அளக்கணும். தோக்கறவன் முட்டாள். ஜெயிக்கிறவன் ஞானி. அவன் மூளை கிலோ கணக்கில் காலிபிளவர் மாதிரி.

நாற்காலிக்காரர்: (தனக்குத் தானே) நல்லது சொன்னா எங்கே ஏறுது. ரத்தத்திலே ஊறிப் போச்சு. பரம்பரை பரம்பரையா ரத்தமும் சதையும் எலும்பும் தோலும் அதுவாவே இருக்கு. காட்டிலே வேட்டையாடின கூட்டங்கறதுக்கு இன்னமும் மனுசன் சாட்சியா இருக்கான்.

வே. பா: (விளையாட்டைக் கவனித்துக் கொண்டே நாற்காலிக்காரர் பக்கம் கையைக் காட்டி) போய்யா... போய்யா...

சீட்டு விளையாடுபவர்கள்: (மும்முரத்தில் இவர்கள் பேச்சைக் கவனிக்காது பேசியதின் கடைசிச் சொல்லைப் பிடித்துக் கொண்டு) போய்யா... போய்யா...

கோலிக்குண்டுக்காரர்கள்: (அனிச்சையாக) போய்யா... போய்யா...

ஒருவன்: (சப்த இசையின் சுவாரஸ்யத்தில் நிமிர்ந்து குறிப்பாக யாரையும் பார்க்காமல் எங்கோ கவனித்து) போய்யா... போய்யா...

இன்னொருவன்: (நிமிர்ந்து பிரக்ஞையோடு) போய்யா போய்யா...

எல்லோரும்: (ஆட்டத்தைக் கலைத்து எழுந்து உற்சாகத்துடன்) போய்யா போய்யா...

வே. பா: ஆகா என்ன பிரமாதமான விளையாட்டு இது.

ஒருவன்: இனிமே நாம இந்த விளையாட்டே விளையாடிணு என்ன?

இன்னொருவன்: ஆமாம் இது நல்லா இருக்கு. விளையாடலாமே.

மற்றொருவன்: விளையாடுவோம். இதையே விளையாடுவோம்.

அடுத்தவன்: இந்த விளையாட்டிலே ஒருத்தன் பாக்கியில்லாமே எல்லாரும் .கலந்துக்கலாம்.

பிறிதொருவன்: விளையாடறவன் வேடிக்கை பாக்கறவன்ங்கற வித்யாசம் இல்லாமே பூடும்.

ஒருவன்: எல்லாரும் சமம்.

அடுத்தவன்: ஆமாம் இந்த விளையாட்டு எல்லாரை சமமாக்கிடும்.

மற்றவன்: இனிமே நாம இதையே விளையாடுவோம்.

இன்னொருவன்: போய்யா ... போய்யான்னு? ஒரே அபத்தமா இருக்கு என்ன விளையாட்டு இது. போய்யா போய்யான்னு சொல்றதிலே என்ன சுவாரஸ்யம் இருக்கு.

வே. பா: போய்யா போய்யான்னு வேண்டாமே. இது காரணமா இன்னொரு விளையாட்டைக் கண்டு பிடிக்கிறது.

ஒருவன்: போய்யா போய்யாங்கறத்திலேருந்து என்னத்தைக் கண்டுபிடிக்கிறது. (சிரித்து) வாய்யா வாயான்னு சொல்லலாமா?

மற்றொருவன்: எனக்கொரு யோசனை தோணுது.

எல்லாரும்: (அவனைச் சூழ்ந்து கொண்டு) என்ன யோசனை என்ன யோசனை.

அந்த மற்றொருவன்: கோஷம் போடற வி'யாட்டு.

இன்னொருவன்: போய்யா...போய்யா ... கோஷம் போடறது ஒரு விளையாட்டா?

அந்த மற்றொருவன்: போய்யா போய்யா கோஷம் போடறது விளையாட்டு இல்லாமே பின்னே என்னவாம்?

வே. பா: ஆமாய்யா ஆமாய்யா ... கோஷம் போடறதும் ஒரு விளையாட்டுன்னுதான்யா தோணுது.

ஒருவன்: அவரு சொல்றது ரொம்ப சரி.

இன்னொருவன்: ரொம்ப ரொம்ப சரி.

அடுத்தவன்: போய்யா...கோஷம் போடறதுலே என்னய்யா லாபம். தொண்டை வரண்டு புண்ணுப்போகும்.

மற்றவன்: அதெல்லாமில்லே. கோஷம் மனதுக்குத் தெம்பைத்தருது.

அடுத்தவன்: உற்சாகமூட்டுது.

பக்கத்தவன்: சோம்பலைவிரட்டுது. சுறுசுறுப்பாக்குது.

ஒருவன்: மனோதத்துவமே இதுலே மறைஞ்சுகிடக்கு.

அடுத்தவன்: கோஷத்தாலே தேசத்தையேஎழுப்பிடலாம்.

இன்னொருவன்: ஆமாம். கோஷத்தாலே சாதிக்க முடியாததே இல்லேன்னு தோணுது.

அடுத்தவன்: அப்போ நாம கோஷம் போடலாம்.

பக்கத்தவன்: என்ன கோஷம் போடறது.

ஒருவன்: வாழ்க வாழ்கன்னு விண்ணை முட்டக் கத்தலாம்.

இன்னொருவன்: வாழ்கன்னு அலுப்புத்தட்டிஞ ஒழிகன்னு கத்தலாம்.

அடுத்தவன்: சீச்சீ. ஒழிகன்னு கத்தக்கூடாது. நம்ம சக்தி வீண். வாழ்கன்னே கத்துவோம். வாழறது வாழ்ந்தா ஒழியறது தானு ஒழியும்.

பக்கத்தவன்: அது எப்பிடி? வாழறது நல்லா வாழணும்னு ஒழியறது ஒழிஞ்சாகணும். ஒழிச்சுக் கட்டியாகணும்.

இன்னொருவன்: பயிரு வளரணும்னு களையே புடுங்கணும்.

ஒருவன்: முளையிலே கிள்ளி எரியணும்.

மற்றவன்: புல்லுருவி மொளைச்சமரம்போறை விழுந்துடும்.

அடுத்தவன்: வேரோட புடுங்கி எறியணும்.

ஒருவன்: எதெ...நிலத்திலே மொளைச்சதையா மரத்திலே மொளைச்சதையா?

இன்னொருவன்: (அவன்சொன்னதைக்கவனிக்காமல்) ஆணிவேரு அறுகாமே புடுங்கி எறியணும். புடுங்கின எடத்திலே மீண்டும் மொளைக்காமே வெந்நீரே தளைக்கத் தளைக்கக் காய்ச்சி ஊத்தணும்.

அடுத்தவன்: இல்லே இல்லே திராவகம் ஊத்தணும்.

வே பா: இப்போ ...ஒரு பெரிய தப்பு நடந்துபோச்சு. யாருமே கவனிக்காமே நடந்து போச்சு. பெரிய தப்பு ஒண்ணுநடந்து போச்சு.
(திடீரென்று அமைதி)

ஒருவன்: என்ன தப்பு?

அடுத்தவன்: யாரு செஞ்சதப்பு?

பக்கத்தவன்: (மிக அமைதியாக) நான் செய்யலே. அவன்.

ஒவ்வொருவரும்: (பரபரப்புடன்) நான் செய்யலே அவன். நான்செய்யலேஅவன். (என்று ஒருவரைப் பார்த்து ஒருவர் ஆள் காட்டிவிரலைநீட்டுகிறார்கள்)

வே. பா: ஆகா பாத்தீங்களா? உண்மை எப்படி வெளிப்படுதுன்னு பாத்தீங்களா? உண்மையெ மறைச்சு வைக்க முடியாதுன்னு தெரிஞ்சுபோச்சா எல்லாரையும் நோக்கி ஆள்காட்டி விரல் நீண்டிருக்கு பாத்தீங்களா? யாரும் மிச்சமில்லே பாத்தீங்களா? ஆமாம். நீங்க எல்லாருமா சேர்ந்து தான் தப்பு செஞ்சீங்க. ஆள் காட்டி விரலுக்கு ஆள்காட்டி விரல் கோடு போட்டுச் சேருங்கள். எத்தனைக் கோடுகள். எத்தனைக் கோடுகள்.

குறுக்கும் நெடுக்குமா, குறுக்கும் நெடுக்குமா? ஒரே குளறுபடி சிக்கல். (புதிதாகக் கண்டு பிடித்த சந்தோஷத்துடன்) ஆகா இன்னொரு உண்மை (அதுமறந்துபோகத்தலையைச்சொறிந்து வேறு நினைப்பில் சந்தோஷம் வந்து) பரவாயில்லே. ஒத்தனை ஒத்தன் குற்றஞ்சாட்டின செஞ்ச தப்பு மறந்துபோகும். செஞ்சவனுக்கே மறந்துபோகும். ஊருக்கே மறந்துபோகும். உலதுக்கே மறந்துபோகும் ஆராய்ச்சி செய்ஞ்சா டாக்டரேட் வாங்கலாம். இன்னொருத்தன் வேறு விதமா செஞ்சும் டாக்டரேட் வாங்கலாம். ஒண்ணுக்கு ஒண்ணு முரணாக இருக்கும். உண்மை தெரியாது. டாக்டரேட் மிஞ்சும் (கொஞ்சம் யோசித்து) உண்மையே மறைச்சு வைக்க முடியாதா? என்ன இது டாக்டரேட்டிலே உண்மை தெரியாமே போச்சே. (சற்று அமைதி. பிறகு சாந்தமாக) சீச்சீ... நமக்கு இந்தப் பிரச்சனை எல்லாம் ஏதுக்கு. நீங்க எல்லாருமா சேர்ந்துதான் தப்பு செஞ்சீங்க. (குழப்பத்தில் சோர்ந்து போகிறார்)

எல்லாரும்; (விரலை மெல்ல மடக்கிக்கொண்டு) நாங்களா? நாங்களா? (அமைதி)

ஒருவன்: நாங்க எல்லாருமா?

அடுத்தவன்: எப்படி? என்ன தப்பு செஞ்சோம்?

வே. பா: (உற்சாகம் திரும்பி, நாம கோஷம் போடறதைப் பத்தித்தானே பேசிக்கிட்டிருந்தோம்.

ஒருவன்: ஆமா.

வே. பா: முளையே கிள்ளறது, வேரோட புடுங்கறது, திராவகம் ஊத்தறதுன்னு ஏன் ஆரம்பிச்சிங்க? கோஷத்தே மறந்துட்டு காரியத்தில் ஞாபகம் எப்படி வரலாம் உங்களுக்கு. கோஷம் வேறே. காரியம் வேறே. ரெண்டையும்போட்டுக் குழப்பிக் காதீங்க.

இன்னொருவன்: ஆமா. நாம ரெண்டையும் போட்டுக் குழப்பிக்கக் கூடாது.

அடுத்தவன்: நாமகோஷமே போடுவோம். அதை நாம் உடனே போடலாம்.

பக்கத்தவன்: உடனுக்குடனே.

மற்றவன்: இப்பவே. யோசிக்காமே இப்பவேஉடனுக்குடனே போடலாம் கோஷம்.

ஒருவன்: காரியமுஞ்செய்யலாங் கோஷமும் போடலாம். கோஷத்துக்கான காரியம் செய்வோம். காரியத்தைக் காட்டிக் கோஷத்தைப் போடலாம்.

அடுத்தவன்; சேதுவை மேடுயர்த்தி வீதி சமைப்போம்.

இன்னொருவன்: வெள்ளிப் பனிமலையின் மீதுலாவுவோம்.

மற்றவன்: கோஷத்துக்குள்ளே லட்சியமிருக்கு.

அடுத்தவன்: லட்சியமெல்லாம் கோஷங்கள்தான்.

ஒருவன்: சரி...சரி...விஷயத்துக்குவருவோம். இப்படி லொட லொடன்னு பேசிக்கிட்டிருக்கிறதிலே அர்த்தமில்லே. எதை ஒழிகன்னு கோஷம் போடறது. வெறுமே ஒழிகன்னு போட்டா பத்தாதே. பத்துமா?

பக்கத்தவன்:. பத்தாது பத்தாது.

இன்னொருவன்: அது போதவே போதாது.

வே. பா: (கடகடவென்று சிரித்து) காத்திலே எச்சல் துப்பினா அர்த்தமில்லே. அதுக்கு ஒரு மூஞ்சி வேணும்.

ஒருவன்: எதிர்காத்திலே துப்பினா அந்த மூஞ்சி நம்ம மூஞ்சி

அடுத்தவன்: காத்துப்போக்குலே துப்பணும் அதுக்கு எதிரிலே ஒரு மூஞ்சி

இன்னொருவன்: அப்போ ஒழிகன்னு மட்டும்தானா?

பக்கத்தவன்: நம்ம மூஞ்சி...?

வே. பா: இந்தப் பிரச்சனையே ஒருவகையா நாம தீர்க்கலாம்.

எல்லாரும்: எப்படி? எப்படி?

வே. பா; சீட்டுக்கட்டு கோஷ்டி, கோலிக்குண்டு கோஷ்டின்னு ரெண்டா பிரிச்சுக்குவோம்.

ஒருவன்: சபாஷ் ஒரு தீர்வு தோணுது.

அடுத்தவன்: காத்திலே ஒரு தீர்வு தோணுது.

இன்னொருவன்: பிரிச்சுக்கிட்டு.

வே. பா: சீட்டுக்கட்டு கோஷ்டி கோலிக்குண்டு கோஷ்டி ஒழிகன்னு கோஷம்போடணும். கோலிக்குண்டுகோஷ்டி சீட்டுக்கட்டு கோஷ்டி ஒழிகன்னு கோஷம் போடணும்.

சீட்டுக்கட்டு கோஷ்டி: இதுக்கு நாங்க ஒத்துக்க மாட்டோம்.

கோலிக்குண்டுகோஷ்டி: இதுக்கு. நாங்களும் ஒத்துக்க மாட்டோம்.

ஒருவன்: இந்தப் பிரச்சனைக்கி ஏதும் தீர்வுஇல்லியா?

வே. பா: இருக்கு. இருக்கு. அவசரப்படாதீங்க. பிரச்சனைன்னு இருந்தா தீர்வு இல்லாமேயாபூடும்.

இன்னொருவன்: என்ன தீர்வு அது?

வே. பா: ஏதாவது ஒரு மத்யஸ்தத்துக்கு நாம உடன் படணும். மத்யஸ்த்தம் இல்லாமே தீர்வு எப்படி? சீட்டுக்கட்டு கோஷ்டி தங்களைத் தாங்களே வாழ்கன்னு கோஷம் போட்டுக்கவேண்டியது. அப்படியே கோலிக்குண்டு கோஷ்டியும்.

ஒருவன்: பரவாயில்லே, நல்ல மத்யஸ்தம்தான் இதுன்னு எனக்குத்தோணுது.

வே. பா: ஒழிகவே வாழ்க சரிக்கட்டிடறதாலே யாருக்கும் நஷ்டமில்லே

அடுத்தவன்; விளையாடின மாதிரியும் இருக்கும்.

சீட்டுக்கட்டு கோஷ்டி: (முந்திக்கொண்டு) கோலிக்குண்டு கோஷ்டி ஒழிக.

கோலிக்குண்டு கோஷ்டி: (இடைமறித்து) சீட்டுக்கட்டு கோஷ்டி ஒழிக.

சீட்டுக்கட்டு கோஷ்டி: சீட்டுக்கட்டு கோஷ்டி வாழ்க.

கோலிக்குண்டுகோஷ்டி: கோலிக்குண்டு கோஷ்டி வாழ்க

வே. பா: (கையை அமர்த்தி) பாத்தீங்களா? கோஷ்டி கோஷம். சிட்டுக் கட்டு கோலிக் குண்டு, வாழ்க ஒழிக, ஒழிக வாழ்க. கவிதை மாதிரி இருக்கு பாத்தீங்களா?

ஒருவன்: சபாஷ் நம்ம [illegible] ஒரு கவிதை எழுதப்போறேன். (என்று விலகிப்போய் பையிலிருந்து பென்சிலும் தாளும் எடுத்து எழுதி பார்த்து பார்த்து சந்தோஷப்பட்டுக்கொள்கிறான்)

இன்னொருவன்: எனக்கும் தெரியும் எங்க கோஷ்டியும் சளைத்து விடவில்லை (என்று விலகிப்போய் கவிதை எழுதி படித்து மகிழ்ந்து கொள்கிறான்)

ஒருவன்: விளையாட்டு ரொம்ப குஷியா இருக்கு. உற்சாகம்தருது.

வே. பா: இது மட்டுமில்லே இன்னமும் இந்த விளையாட்டே நாம அழகா வளர்க்கலாம்.

ஒருவன்: ஆமாம்... ஆமாம். எத்தனை நேரம்தான் கோஷம் போடறது. ஒரு நோக்கம் வேண்டாம்.

இன்னொருவன்: ஆமாம் ஒரு நோக்கம் வேண்டியது தான.

அடுத்தவன்: மக்களுக்கு நன்மைன்னு ஒரு நோக்கம் வைச்சுக்கிட்டா?

கவிதை எழுதுகிறவர்கள்: (சேர்ந்து) நம்ம லட்சியத்தை தான் கவிதையில் சேர்த்துக்கிறேன்.
(இருவரும் எழுதுவதில் முனைகிறார்கள்)

ஒருவன்; (முன்னதைத் தொடர்ந்து) அருமையான நோக்கம். இதைவிடப் பெரிய லட்சியம் வேறே என்ன இருக்க முடியும்.

(கவிதை எழுதியவர்கள் திரும்பிவந்து எழுதிய தாளை தங்கள் தங்கள் கோஷ்டியில் ஒவ்வொருவரிடம் கொடுகிறார்கள். இரண்டு தாளும் இருவரால் படிக்கப்பட்டு மேலே இநவரிடம் போகிறது. முன்னும் பின்னுமாக இரண்டு கவிதைகளையும் படித்த இருவரும் முன்னும் பின்னுமாக 'சபாஷ்" என்று படிக்க மேலே அனுப்புகிறார்கள். முன்னும் பின்னுமாக இரட்டை இரட்டை 'சபாஷ்கள்' படிக்கும் நேர இடைவெளி கொடுத்து எல்லாராலும் சொல்லப்படுகிறது.)

ஒருவன்: (கடைசியாக கவிதை படிப்பவர்களில் முந்தி முடித்தவன்) சபாஷ். மக்கள் நன்மைக்காக கோலிக்குண்டு கோஷ்டி ஒழிக (என்று கவிதையை எழுதியவனிடம் கொடுக்கிறான்.)

இன்னொருவன்: (கடைசியாக படித்து முடித்தவன் நிமிர்ந்து சபாஷ் சொல்லாமல்) சீட்டுக்கட்டுஎன்ன முந்திக்கறே. முந்திரிக்கொட்டை. தொலைச்சுக்கட்டிடுவோம் தொலைச்சு. ஆமாம். தெரிஞ்சுக்க. கவிதை ரத்தத்திலே சூடு ஏத்தி இருக்கு. மூச்சுக் காத்திலே அனல்பறக்குது. கண்ணுக்குள்ளே விழி தணல் துண்டா உருளுது. ஞாபகம் வைச்சுக்க. தொலைச்சுக் கட்டிடுவோம் தொலைச்சு.

சீட்டுக்கட்டு கோஷ்டி: (சேர்ந்து) எங்க கை மட்டும் பூப்பறிக்குமோ?

வே. பா: (கையை அமர்த்தி) பத்தீங்களா பத்தீங்களா. அவசரப்பட்டுட்டீங்க விளையாட்டுக்கு நாம இன்னும் முறைகளைக் கண்டு பிடிக்கணும். அதுக்கு முன்னே அவசரப்படக்கூடாது.

ஒருவன்: ஆமாம். அவசரப்படக்கூடாது.

இன்னொருவன்: நிதானமாக இருக்கணும்.

மற்றொருவன்: எத்தனை நேரம்யா கோஷம் போடறது. தொண்டை வரண்டு போகுது. வேறே ஏதாவது நாம ஒடனே கண்டுபிடிக்கணும்.

பக்கத்தவன் : [illegible]

அடுத்தவன்; விளையாட்டுக்கு வெற்றி தோல்வி இருக்கணும். வெற்றி தோல்வி இல்லாமே ஒரு விளையாட்டா?

மற்றவன்: தோற்றவன் வருந்தினாத்தான் ஜெயிச்சவன் சந்தோஷத்துக்கு அர்த்தமிருக்கும்.

மற்றொருவன்: இல்லேன்னா எல்லாம் சப்புன்னு இருக்கும்.

ஒருவன்: அப்போ வெற்றி தோல்வி உள்ள ஒரு விளையாட்டே நாம கண்டுபிடிக்கணும். வெறும கோஷம் மட்டும் பத்தாது. தொண்டை வரண்டு போகுது.

அடுத்தவன்: தொண்டை வரண்டுதான் போகுது.

பக்கத்தவன்: தண்ணி குடிச்சா என்ன? மேலே கோஷம்போட தொண்டைக்கி இதமா இருக்குமில்லியா?

அடுத்தவன்: எல்லாரும் தண்ணி குடிப்போம்.

எல்லாரும்: தண்ணி... தண்ணி..

வே. பா: அப்பா (காதைப் பொத்திக் கொண்டு) உங்களே திருத்தறது ரொம்பக் கஷ்டம் போலேருக்கு. தண்ணி தண்ணின்னா தண்ணி வந்துடுமா? தண்ணி ஒரு கோஷமா என்ன? கோஷம் போடற எடத்திலே காரியம் செய்யறேங்கறீங்க. காரியம் செய்ய வேண்டிய எடத்திலே கோஷம் போடறீங்க தண்ணி போய்க் கொண்டுவர வேண்டிய காரியம். யாரானும் போய்க் கொண்டாங்க தவிச்ச வாய்க்கி தண்ணி குடுக்கறது புண்ணியம்னு சொல்வாங்க. போய்க் கொண்டாங்க. போங்க.

(கோஷ்டிக்கு ஒருவராகத் தண்ணீர் எடுக்கப் போகிறார்கள்)

ஒருவன்: தண்ணி வரத்துக்குள்ளாறே நாம கோஷம் போட்டுக்கிட்டிருக்கலாம்.

இன்னொருவன்: பொழுதுபோகும்.

மற்றவன்: இது ஒரே அடியா கோஷம் போட்டுட்டுப் பின்னாடி தண்ணி குடிச்சதா இருக்கும். இந்த நேரத்திலே சும்மா இல்லாததாகவும் இருக்கும். ஏதாவது செஞ்ச சந்தோஷமும் இருக்கும்.

அடுத்தவன்: வரண்ட தொண்டையோட வரண்ட தொண்டையா கோஷம் போட்டுடலாம்.

ஒருவன்: வரண்ட தொண்டையிலே தண்ணி குடிச்சு ஒரேயடியா நனைச்சுக்கலாம்.

பக்கத்தவன்: நனைஞ்ச தொண்டையே அப்புறம் வரட்டிக்காமே வரண்டதையே வரட்டிக்கிட்டு ஒரேயடியா நனைச்சுக்குவோம்.

(எல்லோரும் வாழ்க, ஒழிக என்று கோஷம் போடுகிறார்கள். அதற்குள் சென்ற இருவரும் இரண்டு நீண்ட கழுத்து மண் கூஜாக்களில் தண்ணீரும், இரண்டு டம்ளரும் கொண்டு வருகிறார்கள்.)

வே. பா: அமைதி. அமைதி. தண்ணி வந்துட்டது. எல்லோரும் தண்ணி குடிக்கலாம்.

(எல்லாரும் நான் முந்தி நீ முந்தி என்று தண்ணீருக்குப் பறக்கிறார்கள். மேலெல்லாம்

எடுத்துக்கொண்டு குடிக்கிறார்கள். குடித்ததைவிட வாயிலிருந்து வழிந்து மார்பில் விழுந்து சட்டை நனைந்தது அதிகமாக இருக்கிறது. இரண்டு கோஷ்டியும் தனித்தனியே தண்ணீர் குடிக்கிறது ஒருவன் குடித்து முடிக்குமுன் இன்னொருவன் டம்ளருக்குக் கைநீட்டுகிறான். டம்ளரை நோக்கிப் பல கைகள் நீள்கின்றன.)

சீட்டுக்கட்டுக் கோஷ்டி: (ஒவ்வொருவரும் தண்ணீர் குடித்ததும்) அப்பாடா

கோலிக்குண்டு கோஷ்டி: (ஒவ்வொருவரும் தண்ணீர் குடித்ததும்) அம்மாடி.

(இப்படி அப்பாடா அம்மாடி திருப்பித் திருப்பிச் சொல்லப்படுகிறது)

வே. பா: என்ன சுகம் என்ன சுகம். கோஷம்போட்ட தொண்டைக்கி தண்ணீர் அமிர்தம். இல்லையா?

ஒருவன்: ஆமாமாம். இனிமே நாம வெற்றி தோல்வீ உள்ள விளையாட்டை விளையாடணும் கோஷம் பத்தாது.

இன்னொருவன்: சுறுசுறுப்பே தர கோஷமே சோர்வையும் தருது.

வே. பா: ஒரு விளையாட்டைக் கண்டு பிடிப்போம்.

ஒருவன்: என்ன விளையாட்டு.

இன்னொருவன்: வெற்றி தோல்வி உள்ள விளையாட்டு.

அடுத்தவன்: இந்த மனுஷ விளையாட்டே வேண்டாம். விரோதம் வருது, ஒரு மிருக விளையாட்டு விளையாடலாம்.

பக்கத்தவன்: அல்லது பறவை விளையாட்டு.

மற்றவன்: காட்டு மிருகமா வீட்டு மிருகமா?

அடுத்தவன்: காட்டுப் பறவையா வீட்டுப் பறவையா?

ஒருவன்: சீச்சீ காட்டுப் பறவையா நாட்டுப் பறவையா?

இன்னொருவன்: சபாஷ் எவ்வளவு அற்புதமா விஷயங்கள் பிறக்குது பாத்தீங்களா? வேட்டை விளையாட்டு.

அடுத்தவன்: மிருக விளையாட்டு வேண்டாம். அது மனுஷனைப்போல தரையிலே நடக்கிற காரியம். பறவை விளையாட்டு. அதுதான் ஆகாசத்திலே பறக்கற காரியம்.

வே. பா: எனக்கொரு யோசனை தோணுது.

எல்லோரும்: (அவனைக் குவிந்து கொண்டு) என்ன? என்ன?

வே. பா: காக்கா கூஜாவிலே கூழாங்கல் போட்ட கதை தெரியுமா?

ஒருவன்: தட்டுலே நரியும் கொக்கும் பாயசம் குடிச்ச கதை தெரியும்.

இன்னொருவன்: சீச்சீ இந்தப் பழம் புளிக்கும் கதை தெரியும்.

மற்றவன்: கொக்கு நரி தொண்டையிலே எலும்பு எடுத்த கதை தெரியும்.

அடுத்தவன்: மூக்கிலே வடை உள்ள காக்கா நரிக்காக சங்கீதம் பாடின கதை தெரியும்.

வே. பா: யாருக்கும் காக்கா கூஜாவிலே கூழாங்கல் போட்ட கதை தெரியாது?

எல்லாரும்: தெரியும் தெரியும்.

வே. பா: அதுதான் நம்ம விளையாட்டு.

எல்லாரும்: எப்படி? எப்படி?

வே பா: கூஜாவிலே இன்னும் தண்ணி இருக்கா. ரெண்டு கூஜாவிலேயும் இருக்கா?

எல்லாரும்: இருக்கு இருக்கு (என்று கூஜாவைக் குனிந்து பார்க்க முயற்சிக்கிறார்கள்).

வே. பா: எல்லாரும் கூழாங்கல்லே எடுத்துக்க வேண்டியது. ஒவ்வொரு கல்லா கூஜாவிலே போட வேண்டியது. எந்தக் கூஜாவிலே முதல்லே தண்ணி மேலே வருதோ அவங்களுக்கு வெற்றி.

ஒருவன்: சபாஷ்...சபாஷ் வெற்றி தோல்வி உள்ள விளையாட்டு. (இரண்டு கோஷ்டியும் இரண்டு கூஜாக்களையும் எடுத்துக் கொள்கின்றனர். சிலர் கூழாங்கல் பொறுக்க ஓடுகிறார்கள். கூழாங்கல்லோடு திரும்புகிறார்கள். மொத்தக் கற்களையும் வேடிக்கை பார்ப்பவன் வேஷ்டியில் வாங்கிக் கொள்கிறான். மிச்சத்தைத் தான் வைத்துக் கொண்டு ஒரு கல்லை நாற்காலிக்காரன் கையில் கொடுக்கிறான்.)

நாற்காலிக்காரன்: இந்த வம்புலே என்னை ஏன் இழுக்கறே.

வே. பா: ஒனக்கும் கடமை இருக்கு.

எல்லாரும்: அவனுக்கும் கடமை இருக்கு.

சீட்டுக்கட்டுக்கோஷ்டி கூஜாக்காரன்: (கூஜாவைத் தலைக்கு மேல் தூக்கிப் பிடித்துக் கொண்டு) என் கூஜாவிலே பால் (என்று மேடையில் சுற்றுகிறான் அவன் கோஷ்டியின் மற்ற எட்டுப்பேரும், இடுப்பு ஆடையைப் பின்னால் பிடித்துக் கொண்டு ஒருவர் பின் ஒருவராக அவன் போன பாதையில் திரும்பித் திரும்பிவந்து 'என் கூஜாவில்பால்' என்கிறார்கள்)

கோலிக்குண்டு கோஷ்டி கூஜாக்காரர்: என் கூஜாவிலே தேன் (மேற்கண்டபடி)

சீ. கோ. காரன்: என்னுதில் இளநீர்.

,, மற்றவர்கள்; என்னுதில் இளநீர்.

கோ. கோ. காரன்: என்னுதில் பதநீர்.

,, மற்றவர்கள்: என்னுதில் பதநீர்.

சீ. கோ. காரன்: எங்களிடம் கள்.

,, மற்றவர்கள்: எங்களிடம் கள்.

கோ. கோ. காரன்: எங்களிடம் சாரயம்.

,, மற்றவர்கள்: எங்களிடம் சாரயம்.

(இரண்டு கோஷ்டியும் மேற்படி கோஷத்துடன் ஒன்றுடன் ஒன்று மோதிக்கொள்ளாமல் பலவித கோலங்களில் மேடையில் வளைய வளைய வருகிறார்கள்.)

வே. பா: போதும். போதும் திக்கெட்டும் சென்று வெற்றி முரசம் கொட்டுங்கள்.

(இரண்டு அணியும் அப்படியே நிற்கின்றன.)

வன்: திக்கெட்டும் சென்று வெற்றிச் சங்கு ஊதுவோம்.

வே. பா: சங்குவேண்டாம், முரசு போதும். சவச்சங் குக்கும் வெற்றிச் சங்குக்கும் எனக்கு வித்யாசம் தெரியலே. முரசு போதும். முரசு போதும்.

கோலிக் குண்டு கூஜாக்காரன்: (திரும்பி தன் அணி யில் ஒருவனைப் பிடித்து) நீ தெற்கே.

சீட்டுக்கட்டுகூஜாக்காரன்: (தன் அணியில் ஒருவனை) நீ வடக்கு.

கோ. கோ காரன்: நீ கிழக்கே

சீ. கோ. காரன்: நீ மேற்கே

கோ. கோ. காரன்: நீ தெற்கே

சீ. கோ காரன்: நீ வடக்கே

கோ. கோ. காரன்: நீ கிழக்கே

சீ. கோ. காரன்: நீ மேற்கே

கோ. கோ. காரன்: நீ வட கிழக்கே

சீ. கோ. காரன்: நீ தென் மேற்கே

கோ. கோ. காரன்: நீ தென் கிழக்கே

சீ. கோ. காரன்: நீ வட மேற்கே

கோ.கோ.காரன்: நீ வடகிழக்கே

சி.கோ.காரன்: நீ தென்மேற்கே

கோ.கோ.காரன்: நீ தென்கிழக்கே

சி.கோ.காரன்: நீ வடமேற்கே

(மேடையில் ஒவ்வொருவரும் எட்டுத் திசையிலும் சென்று எதிரும் புதிருமாக நின்று கையை உயர்த்திக் கோஷம் போடுகிறார்கள். இரண்டு கூஜாக்காரர்களும் மேடை நடுவில்)

தெற்குகோலி: என் கூஜாவில் பால்.

தெற்கு சீட்டு: என் கூஜாவில் தேன்.

தெ. மேற்கு கோலி: என் கூஜாவில் கள்

,, சீட்டு: என் கூஜாவில் பிராந்தி.

மேற்கு கோலி: என் கூஜாவில் டீ

மேற்கு சீட்டு: என் கூஜாவில் காபி

வடமேற்கு கோலி: என் கூஜாவில் இளநீர்.

,, சீட்டு: என் கூஜாவில் பதநீர்

வடக்கு கோலி: அவன் கூஜாவில் நீராகாரம்

வடக்கு சீட்டு: அவன் கூஜாவில் கஞ்சி.

வடகிழக்கு கோலி: அவன் கூஜாவில் விஷம்.

வடகிழக்கு சீட்டு: அவன் கூஜாவில் ஆலகாலம்.

கிழக்கு கோலி: அவன் கூஜாவில் மூத்திரம்.

கிழக்கு சீட்டு: அவன் கூஜாவில் சாண்டை.

தென்கிழக்கு கோலி: அவன் கூஜாவில சாணித் தண்ணி.

தென்கிழக்கு சீட்டு: அவன் கூஜாவில்பீக்கரைசல்.

சீட்டுக்கட்டு கூஜாக்காரர்கள்: எங்கள் கூஜாவிலேயே உங்கள் கற்களைப் போடுங்கள் உங்களுக்கு இந்த தேவ அமிர்தத்தை நாங்கள் பரிமாறப் போகிறோம். அவன் கூஜாவில் மிஞ்சியிருப்பது ஆலகால விஷம்.

(சீட்டுக்கட்டை வைத்துக்கொண்டிருக்கும் ஒருவன், அதை எடுத்துக் கலைத்து விரல்களில் பிரித்து ஒவ்வொன்றாகக்கோலிக்குண்டுகோஷ்டிக் காரர்களிடம் கொடுக்கப் பார்க்கிறான். கோலிக் குண்டு கோஷ்டிக்காரர்கள் முறைத்துஉம்மென்று நிற்கிறார்கள். ஊமை நாடக பாணியில் நடக் கிறது.)

கோலிக்குண்டு கூஜாக்காரன்: இல்லை. அவன் சொல்வது எல்லாம் பொய். எங்கள் கூஜாவில் அமிர்தம். திருப்பாற் கடல் கடைந்த நஞ்சை நாங்கள் சாப்பிட்டு எங்கள் நெஞ்சில் தேக்கிக் கொண்டோம் அதனால்தான எங்கள் தொண்டை கட்டிக் கொண்டிருக்கிறது. உங் களுக்காகத் தூய அமிர்தத்தை இந்தக் கூஜாவில் பிடித்துக்கொண்டு வந்திருக்கிறோம் நாங்கள் சாப்பிட்டது போக மிஞ்சிய நஞ்சை அவன் தன் கூஜாவில் பிடித்துக்கொண்டு அதை உங்களுக்குக் கொண்டு வந்திருக்கிறான். இதைக் கண்டு நீங்கள் ஏமாந்து விடாதீர்கள். உங்களை அந்த விஷம் கொன்றுவிடும். ஆகவே, எங்கள் கூஜா வில் உங்கள் கற்களைப் போடுங்கள். மிதந்து வரும் அமிர்தத்தை உங்களுக்கு நாங்கள் பரிமாறு வோம். பிறகு ஆளுக்கு ஒரு கூஜாக் கல்லும் கொடுக்கிறோம். அதில் ஒட்டிக் கொண்டிருக்கும் அமிர்தத்தையும் நீங்கள் சப்பலாம்.

வே. பா: போதும்... போதும்... இனிமேல் நாம் காரி யத்தில் இறங்கலாம். எல்லாரும் கற்களை அவர வர் விரும்பும் கூஜாவில் போடுங்கள். எங்கே... ஒன் . டூ... த்ரீ...

(எல்லோரும் முண்டியடித்துக்கொண்டு ஓடி வந்து கூஜாவில் கற்களைப் போடுகிறார்கள். பிறகு தனி கோஷ்டிகளாகப் பிரிந்துநிற்கிறார்கள். வேடிக்கை பார்ப்பவர்கள் தன் வேஷ்டிக் கற்களை மாற்றி மாற்றி இரண்டு கூஜாக்களிலும் போடு கிறார்கள். அவன் மடிக் கற்கள் எல்லாம் தீர்ந்து விடுகின்றன.)

வே. பா: எல்லா கல்லும் போட்டுத் தீர்ந்தது. தண்ணி எவ்வளவு தூரம் வந்திருக்கு.

(இரண்டு கூஜாவையும் குனிந்து குனிந்து பார்க்கிறான். எல்லாரும் குழுமிக் குனிந்து தங் கள் கோஷ்டி கூஜாக்களைப் பார்க்கிறார்கள்.)

எல்லாரும்: (குனிந்தபடியே) இன்னும் ஒரே ஒருகல். மேலே வந்துடும். மேலே வந்துடும். இன்னும் ஒரே ஒரு கல்.

(அமைதி. நிமிர்ந்து வே.பாவைப் பார்க்கிறார்கள்)

வே. பா: அந்த ஒரே ஒரு கல்லிலேதான் தீர்ப்பே அடங்கிக்கடக்கு. நம்மபட்ட கஷ்டத்துக்கெல் லாம் முடிவு அதாலேதான் தெரியப்போறது. நாற்காலிக்காரரே அந்தக் கல் ஒங்களுக்கு நீங்க யாருக்கு வேண்டுமோ அவங்க கூஜாவிலே ஒங்க கல்லைப் போடுங்க.

நாற்காலிக்காரர்: இந்த வம்பிலே என்னை ஏன் இழுக்குறீங்க?

வே. பா: இது வம்பு இல்லே.

ஒருவன்: இது வம்பு இல்லே. (இருந்த இடத்திலேயே அவரை நோக்கி மண்டியிடுகிறன்.)

இன்னொருவன்: இது வம்பு இல்லே (மண்டி)

அடுத்தவன்: இது வம்பு இல்லே (மண்டி)

எல்லாரும்: இது வம்பு இல்லே. இது வம்பு இல்லே (தங்கள் இடத்தில் மண்டியிடுகிறார்கள். சீட்டுக் கட்டு வைத்திருப்பவன் எழுந்துபோய் நாற்காலிக்காரர் காலடியில் ஒவ்வொரு சீட்டாய் சீட்டு பாணியில் போடுகிறன்.)

வே. பா: இது வம்பு இல்லே. எங்க கடமை ஒவ்வொரு பிரஜையின் கடமை இது. எங்க கல்லிலே தான் தீர்ப்பே இருக்குங்கறபோது நீங்க உங்க பொறுப்பை உணரணும். விலகி இருக்கக் கூடாது.

நாற்காலிக்காரர்: இல்லே... இது வம்பிலேதான் கொண்டுவிடும் என்னே விட்டுடுங்க. நான் சிவனேன்னு இருக்கேன்.

வே. பா: நீங்க அப்படி சொல்லக்கூடாது. ஒவ்வொரு பிரஜையும் தன் கடமையே உணரணும்.

நாற்காலிக்காரர்: எனக்கு உரிமையும் வேண்டாங் கடமையும் வேண்டாம். என்னை விட்டுடுங்க நான் சிவனேன்னு இருக்கேன். நரி வலம் போனுத் தேவலையா இடம் போனுத் தேவலையா? மேலே விழுந்து புடுங்காமே போனுத் தேவலே. என்னே விட்டுடுங்க.

வே. பா: பயம் இவரே விட்டுப் போகமாட்டேங்குது. நீங்க எல்லாரும் இவருக்கு வாக்குறுதி கொடுக்கணும் பாதுகாப்பு கொடுக்கணும்.

எல்லாரும்: (ஒவ்வொருவராய் எழுந்து கொண்டு) நாற்காலிக்காரர் வாழ்க.

ஒருவன்: கடவுள் சத்தியமா அவருக்கு முழுப் பாதுகாப்பு.

இன்னொருவன்: எங்களுக்கு உள்ள உரிமையெல்லாம் அவருக்கும் உண்டு.

அடுத்தவன்: எங்களைப்போல அவரும் தன் கடமையை செய்யணும்.

பக்கத்தவன்: நாற்காலிக்காரர் வாழ்க.

மற்றவர்: அவர் தன் பயத்தை விடணும்.

இன்னொருவன்: அவரும் எங்களிலே ஒருத்தரா முன்னுக்கு வந்து கடமையே செய்யணும்.

அடுத்தவன்: அவர் மரியாதைக்குரியவர். அவராலே தான் இந்த விளையாட்டின் முடிவே இருக்கு.

வே. பா: அந்தக் கல்தான் இவங்க விதியையே நிர்ணயிக்கப்போகுது.

நாற்காலிக்காரர்: இதைப் போட்டால்... இன்னும் பொருத்தமா இந்தக் கல் என் விதியையும்தான் நிர்ணயிக்கப்போகுது.

ஒருவன்: இல்லே... இல்லே. அது இந்த விளையாட்டின் விதி. எல்லாம் விதிப்படி நடக்கணும். நீங்களும் கல். போடணுங்கறது விளையாட்டின் விதி அதை நீங்க நிறைவேற்றணும்.

வே. பா: ரொம்பப் பிசுகிக்காதீங்க. அவங்க ஒங்களை மதிக்கருங்க. அந்த மதிப்புக்கு மரியாதை கொடுங்க. தோல்வி மனப்பான்மை ஆபத்து. எழுந்துவந்து கல்லைப் போடுங்க. தீர்ப்பு உங்க கையிலே.

நாற்காலிக்காரர்: இல்லே... இல்லே... நான் சிவனேன்னு இருக்கேன்.

வே. பா: அது எப்படி? நீங்க கல்லைப் போட்டுத்தான் தீரணும். ஏன்? அது நீதிதேவன் தீர்ப்பாவே இருக்கட்டுமே. நீங்க ஒரு கருவி. அவ்வளவு தான். எழுந்துவந்து கல்லைப் போடுங்க. (அவன் கையைப் பிடித்து இழுத்துக்கொண்டு வருகிறன.)

சீ. கோஷ்டி: எங்க கூஜாவிலே..

கோ. கோஷ்டி: எங்க கூஜாவிலே...

நாற்காலிக்காரர்: சிவனேன்னு இருக்க விட மாட்டேங்கறேங்க...சரி...உங்க வாக்க காப்பாத்துவீங்களா?

எல்லாரும்: காப்பாத்துவோம்... காப்பாத்துவோம்.

நாற்காலிக்காரர்: அப்போ எனக்கு யோசிக்க கொஞ்சம் நேரங் கொடுங்க.

ஒருவன்: வேண்டியமட்டும் எடுத்துக்கோங்க.

அடுத்தவன்: ஆர அமர யோசியுங்க.

நாற்காலிக்காரர்: என் மனச்சாட்சிக்கி விரோதமில்லாமே நடந்துக்கிட்டா கோவிச்சிக்க மாட்டீங்களே.

வே. பா: கோவிச்சுக்க மாட்டாங்க.

நாற்காலிக்காரர்: ஒங்களே போல எனக்கும் விருப்பு வெறுப்பு இருக்குங்கறதே நீங்க மறந்துடக் கூடாது.

எல்லாரும்: மறக்கலே .. மறக்கலே.

நாற்காலிக்காரர்: அப்பறம் கோபம் வரக்கூடாது.

ஒருவன்: கோபம் வராது.

இன்னொருவன்: கோபம் வரவே வராது.

அடுத்தவன்: வெற்றி தோல்வியே ஏத்துக்கிறதுதான் ஒரு விளையாட்டு வீரனுக்கு லட்சணம்.

நாற்காலிக்காரர்: அப்போ... சீட்டுக்கட்டு கோஷ்டியே எனக்குப் பிடிக்காது. அது நம்ம தேசத்து மரபு இல்லே. நம்ம தேசத்து விளையாட்டு இல்லே அது. அது மனிதனை அடிமையா ஆக்கிடுது. சூதாடியா ஆக்கிடுது. கோலிக்குண்டு நம்ம ஆட்டம். நம்ம தேசத்துது. கல் தோன்றின காலத்திலேயே அந்த ஆட்டமும் தோன்றி இருக்கணும். விரலை உபயோகப்படுத்தத் தெரிஞ்சதும் மனுஷன் அதை விளையாடி இருக்கணும். அதனுலே நம்ம தேசத்து விளையாட்டான கோலிக்குண்டு கோஷ்டிக்குத்தான் என் கல். (கல்லை கோலிக்குண்டு கோஷ்டி கூஜாவில் போடுகிறர்.)

வே. பா: சபாஷ் வெற்றி. வெற்றி கோலிக்குண்டு கோஷ்டிக்கு வெற்றி.

கோ. கோஷ்டிக்காரர்கள்: கோலிக்குண்டு வாழ்க... கோலிக்குண்டுக்கு வெற்றி. சீட்டுக்கட்டுக்கு தோல்வி.

கோ. கோஷ்டியில் ஒரு பகுதி: தோத்தான் தோத்தான் தோல் புடுங்கி.

கோ. கோஷ்டியில் இன்னொரு பகுதி: தொன்னூறு மாட்டுக்கு மயிர் புடுங்கி.

(கூஜாவைத் தூங்கிக்கொண்டு ஊர்வலமாய்ப் போய்விடுகிறார்கள். சீட்டுக்கட்டு கோஷ்டி சோர்ந்து உட்கார்ந்து விடுகிறது.)

வே. பா; சோர்ந்துடாதீங்க. அடுத்த காரியத்தே பாருங்க. சோர்ந்துபோனா வெற்றி இல்லாமேயே பூடும். அடுத்த ஆட்டத்திலே நீங்க ஜெயிக்க ணும்.

(கூஜாக்காரன் எழுந்து கூஜாவை கோபத் தோடு கீழேபோட்டு உடைக்கிறான். கோவிக் குண்டு ஒழிக என்று கூச்சலிடுகிறார்கள். எல்லோ ரும் மேடையில் அங்கும் இங்கும் ஓடி ஆடி உதைக்கிறார்கள்.)

வே பா: பெத்தேன் பிழைத்தேன். செத்தேன் பிழைத்தேன். விளையாட்டு வினையா போச்சு. விளையாட்டு வினையா போச்சு.

(ஓடிவிடுகிறான். நாற்காலிக்காரர் பிரமித்து நிற்கிறார். ஆபத்தை உணர்ந்து ஓடப்பார்க் கிறார்.)

ஒருவன்: விடாதே... விடாதே. (நாற்காலிக்காரர் ஓடுகிறார்.)

இன்னொருவன்; விடாதே பிடி .. விடாதே பிடி.

மற்றொருவன்: நமக்குத் தோல்வி இவராலே. விடாதே பிடி ... விடாதே பிடி.

(ஓடியவரை இழுத்துக்கொண்டு வருகிறார்கள்.)

ஒருவன்: வைச்சு அழுத்துங்க.

இன்னொருவன்: சூதாட்டம் நம்ம மரபுன்னு குத்து.

மற்றொருவன்: பொண்டாட்டியேகூடப் பந்தயம் வைக் கலாம்னு குத்து.

அடுத்தவன்: நம்ம மரபுலே இல்லாதது இல்லேன்னு குத்து.

எல்லோரும் அவன்மேல் விழுந்து அழுத்து கிறார்கள்.)

நாற்காலிக்காரர்; (மனிதக் கூட்டத்துக்கு அடியில் கிடந்து ஒடுங்கிய குரலில்) என்னைக் காப்பாத் துங்க... என்னைக் காப்பாத்துங்க.

—[விளக்கு அணைகிறது]—

---

# கசடதபற

(ஒரு வல்லின மாத ஏடு)

தனி இதழ்: 30 காசு

ஆண்டுச் சந்தா: ரூ. 3/-

சந்தா அனுப்பும் அன்பர்கள் தங்களுடைய முகவரியைத் தெளிவாகக் குறிப்பிடவும். ஒவ்வொரு மாதமும் 7தேதிக்குள் 'கசடதபற' இதழ் சந்தாதாரர்களுக்குக் கிடைக்காவிட் டால் உடன் தெரிவிக்கவும். கதை, கட்டுரை, கவிதைகள் அனுப்புகிறவர்கள் பிரசுரிக்க இயலாதவற்றைத் திரும்பப் பெற போதிய தபால் தலையுடன் அனுப்பி வைக்கவும்.

ஆசிரியர்: 'கசடதபற'

1 தேவடி தெரு

சென்னை 4

# அபிப்பிராயங்கள்

'கசடதபற' கிடைத்தது. இங்குள்ள சில ருக்கு அது பெரிய அதிர்ச்சி. 'டிரிப்'பை அரை குறையாகப் படித்துவிட்டு Obscene என்றார்கள். ஆனால் அருமையான கதை. அதைப் படிக்கை யில் வெளியூர்க்காரர்கள் எவ்வளவோ படித்திருக் கிறார்கள் என்பது தெரிகிறது.

ஞானக்கூத்தன் கவிதை நேரே நடந்தது போல் ஒரு பிரமை. அழகான அனுபவிப்பு.

டி. கே. சோமசுந்தரம்,
திருநெல்வேலி.

ந. முத்துசாமியின் கட்டுரையைப் படித்தேன். மௌனியைப் பற்றி நான் குறிப்பிடாததற்கு காரணம் உண்டு. கேவலம் சாஹித்ய அகாடமி பரிசோ, பாரதீய ஞானபீட் பரிசோ மௌனியின் தவிர்க்க முடியாத தரத்திற்கு ஏற்றவை அல்ல.

நோபல் இலக்கியப் பரிசு ஒன்றுதான் மௌனியின் மதிப்புக்கு சமமானது என்பதே என் கருத்து.

ஆர். சுவாமிநாதன்,
சென்னை-17.

சார்வாகன் கட்டுரை தரம் வாய்ந்ததாக இருக்கிறது. தெளிவாக, கட்டுரையே கவிதைபோல உள்ளது. ஆசிரியர் ஆழ்ந்து சிந்திக்கிறார். சோர்வை அகற்றி ஊக்கம் அளிப் பதாக இருக்கிறது கட்டுரை. எவர் எதிர்த்தா லும் புதுக்கவிதை இவர் ஒருவரால்மட்டும் வாழும்.

ம. ந. ராமசாமி,
சென்னை-24.

இந்த ஞானக்கூத்தனை நேரே பார்த்து கையைக் குலுக்க வேண்டும் என்பது வெகு நாளைய ஆசை. அதுவும் இந்த மாச அட்டைக் கவிதையைப் பார்த்தபிறகு அதிக ஆசை.

புதுக்கவிதை பற்றிய சார்வாகன் கட்டுரையை பல்கலைக்கழகப் புலவர்களுக்கு அனுப்பிப் புரிய வைக்கவும். 'நமக்குத் தொழில் கவிதை; புதுக் கவிதை அல்ல' என்ற வரிகள்தான் இக்கட்டுரை யின் முக்கியமான வரிகள்.

சரஸ்வதி ராம்நாத்தின் மொழி பெயர்த்த கதை எனக்கு மிகவும் பிடித்திருந்தது. கதை unusual ஆக இருந்ததே காரணம்.

சுப்ரமணிய ராஜு,
சென்னை-16.

# கருப்புத் தொப்பி

பொது மக்களின் சிந்தையை அத்தனை தூரம் கவர்ந்த ஒரு வழக்கு அது அதனுடைய தீர்ப்பைக் கேட்பதற்காகப் பார்வையாளர் பகுதியில் மக்கள் பரபரப்புடன் கூடியிருந்தார்கள். நீதிபதி தீர்ப்பைச் சொன்னார்—குற்றவாளிக்குத் தூக்குத் தண்டனை.

ஜனங்கள் நடுங்கினார்கள். அத்தனை தூரம் யாரும் எதிர் பார்க்கவில்லை.

குற்றவாளிக் கூண்டில் நின்றுகொண்டிருந்த குட்டனின் இதயத்தில் ஒரு நெட்டுயிர்ப்பு உண்டாயிற்று. சற்று நேரத்திற்கு அவனுடைய காதுகளில் ஏதோ ரீங்காரமிட்டுக் கொண்டிருந்தது.

போலீசார் அவனைச் சிறைக்குத் தள்ளிச் சென்றனர். நிசப்தமாய் வழியில் நின்று கொண்டிருந்த, அவனுக்குப் பரிச்சயமானவர்களை அவலம் நிறைந்த கண்களுடன் அவன் நோக்கினான். அதுதான் தன்னுடைய கடைசித் தரிசனம் என்பதும், இனிமேல் தனக்கு அவர்களைக் காண இயலாது என்பதும் அவனுக்குத் தெரியும். மரணத் தறுவாயிலிருக்கும் ஒருவனுடைய படுக்கையைச்சுற்றி நிற்பவர்களைப் போலத் தன் வழி நெடுக நின்றிருந்த தெரிந்தவர்களை அவன் பார்த்தான்.

தண்டனையைப் பொறுத்துக் கொள்ள, குற்றம் ஒருவனைத் தயார் செய்யும். ஆனால் ஒரு நிரபராதியினுடைய மனம் குற்றத்தின்முன் வேதனையடைகிறது; எதிர்த்தெழுகிறது.

சட்ட மறுப்பு இயக்கங்கள் எங்கும் சுற்றி உலவி வந்து கொண்டிருந்த நேரம் அது. பிரசங்கம் கேட்க ஒரு மைதானத்தில் உணர்ச்சிக் கொந்தளிப்புக்களுடன் கூடிய ஒரு ஆயிரம் பேர்களின் நடுவில் தடை உத்தரவுடன் தோன்றிய ஒரு ஹெட்கான்ஸ்டபிளிடம் அகப்பட்டுக் கொண்டான். அந்த ஹெட்கான்ஸ்டபிளிடம் விரோதம் பாராட்ட வேண்டிய அவசியமென்ன? ஆனால் அப்படித்தான் நடந்தது. ஆட்கள் ஹெட்கான்ஸ்டபிளை வளைத்துக் கொண்டார்கள். பலரும் சேர்ந்து சில காரியங்களைச் செய்தார்கள். நிரபராதியான ஹெட்கான்ஸ்டபிளின் உயிர் நஷ்டப்பட்டது. அந்தப் பெரிய ஜனத்திரளின் இடையிலிருந்து போலீசுக்கு ஒரு ஆசாமி கிடைத்தான். அவன் தான் குட்டன். ஹெட்கான்ஸ்டபிளை நோக்கித் தன் சுட்டு விரலைக் கூட அசைத்திராத குட்டன். ஆனால் சாட்சிகளும் துப்புக்களும் இருந்தன. குட்டன் தூக்கு மரத்தை நோக்கி நடந்து கொண்டிருக்கிறான்.

ஒரு முறை மரணதண்டனைக் கைதிகளின் அறையில் மனோவியாகூலத்துடன் குட்டன் அமர்ந்திருந்தான். அந்த 'போர்டை' அவர்கள் மாட்டினார்கள்—குட்டன் சாகப்போகும் தினத்தையும் நேரத்தையும் அறிவிக்கும் பலகை. குட்டனுடையவாழ்க்கைஇன்னும நாட்களே நீளம் — நான்கு இரவுகளும் நான்கு பகல்களும்.

விசாலமான நீல வானத்தில் மின்னல்தோன்றித் தோன்றி மறைவதைப் போல அரசாங்கத்தில் சட்டங்கள் உண்டாவதும் அழிவதுமாய் இருந்தன. ஒரு சீர்திருத்தத்தில் தூக்குத் தண்டனை இல்லை என்றாயிற்று.

சிறையதிகாரி, குட்டனிடத்திலும் அதை அறிவித்தார். மரண ஊஞ்சலில் ஆடிக் கொண்டிருந்த அந்தத் தூக்குத் தண்டனைக் கைதிக்கும் பெரும் நிம்மதி உண்டாயிற்று.

சௌந்தர்யம் நிறைந்த இந்தப் பிரபஞ்சம் மீண்டும் தனக்குக் கிட்டியதே என்று நினைத்துக் குட்டன் நிம்மதி அடைந்தான்.

சென்ட்ரல் ஜெயில் உபத்திரவம் செய்யும் குற்றவாளிகளுக்கான சுத்தீகரண சாலை அல்லவா! அங்கே நிறையக் கட்டிடங்களும், தொழில் கற்க வசதிகளும் உண்டு. ஆனால் ஒவ்வொரு கைதிக்கும் பெரிய பெரிய பூட்டுக்கள், நெடிய சிறைச் சுவர்கள், பிரத்யேக 'ஸெல்'கள், காவல்காரர், ஜெயிலுடுப்பு, விலங்கு, தொப்பி, முக்காலி இவைகளும் உண்டு.

ஒருமுறை, சிறைச்சாலையதிகாரிகளில் ஒருவர் குட்டனுடைய அறையிலிருந்து ஒரு புத்தகத்தைக் கண்டெடுத்தார்—ஒரு நாவல். அதன் காரணமாக நான்கு நாட்கள் ரேஷனும், அந்தப் புத்தகமும் அவனுக்கு நஷ்டமாயின. மற்றொரு சமயத்தில் அவர், அவனுடைய கையிலிருந்து இரண்டு துண்டு பீடிகள் கண்டு பிடித்தார். அதற்கான தண்டனையும் குட்டன் அனுபவிக்க வேண்டி வந்தது.

ஒரு நாள், ஒரு தலைமை வார்டரும், இரண்டு வார்டர்களும் சேர்ந்து குட்டனிடம் சென்று ஒரு கருப்புத் தொப்பியை நீட்டிக் கொண்டு சொன்னார்கள்:—

"இந்தா! இதைத் தலையில் வைத்துக் கொள்!"

"முடியாது! எனக்குச் சிவப்புத் தொப்பிபோதும்"—அந்தக் கருப்புத் தொப்பியை வெறுப்புடன்நோக்கியவாறு குட்டன் எதிர்த்துச் சொன்னான்.

கருப்புத் தொப்பி, திருட்டுக் குற்றவாளிகளுக்கானது. ஒரு திருடனின் விளம்பரப் பலகையைத் தன் தலையில் ஏற்றி வைத்துக் கொண்டு அவமானத்தை உண்ண அவனுக்குச் சம்மதமில்லை.

"நீ வைக்க மாட்டாய்; அப்படித்தானே?"—வார்டர் கேட்டான்.

"நான் ஒரு கொலைக் குற்றவாளியாச்சே! எனக்கு எதற்குக் கருப்புத் தொப்பி?"—குட்டன் கேட்டான்.

"நீலா பாயின்ட் சொல்றியோ?" தலைமை வார்டருக்குக் கோபம் வந்தது. அவர் தொடர்ந்தார். "உனக்குக் கருப்புத் தொப்பி வேண்டுமென்று நாங்கள் தீர்மானிக்கிறோம். நீ திருடனில்லை. அப்படித்தானே? நீ கருப்புத் தொப்பி வைக்கிறாயா இல்லையா என்பதைக் காட்டுகிறேன்!'—ஹெட் வார்டன போய் விட்டான்.

தான் திருடனில்லை என்று தர்க்கம் செய்யக் குட்டனுக்கு இயலாது. ஒரு காலத்தில் அவன் ஒரு வக்கீல் வீட்டில் வேலையாயிருந்தான். வக்கீல் மகள் சாவித்ரிக்குக் குட்டனிடம் மிகவும் பிரியம் தோன்றிவிட்டது. இதன் காரணமாய் வக்கீல் குட்டனை வேலையிலிருந்து நீக்கினார். வழிச் செலவிற்குக் கூடக் காசில்லாமல் புறப்படுகின்ற குட்டனுக்கு சாவித்ரி தன் மாலைகளில் ஒன்றை அன்பளிப்பாய்க் கொடுத்தாள். மாலையுடன் புறப்பட்ட குட்டனைப் போலீஸ் திருட்டுக் கேஸில் பிடித்துக் கொண்டது. அப்படியாக அவன் ஏழு மாதங்கள் சிறையில் கிடந்தான்.

மத்ய சிறையில் திருட்டுக் குற்றவாளியாகத் தண்டனை அனுபவித்த ஒருவன் அதன்பின் எப்படிப்பட்ட குற்றவாளியாகப் போனாலும் கருப்புத் தொப்பி அணிய வேண்டும். அப்படிப் பட்ட மாற்றமில்லாத ஒரு சிறை விதியைப் போய் இந்த சுய மரியாதைக் காரன் எதிர்க்கிறான்.

அன்றிரவு அவனுக்குத் தாங்க முடியாத பல்வலி உண்டாயிற்று ..கஷ்டம் நிறைந்த இருபது வருடங்கள். அந்த நீண்ட கால அளவைப் பற்றியுள்ள சிந்தனையில் அவனுடைய இதயம் வேக ஆரம்பித்தது. அவன் கணக்குப் போட்டுப் பார்த்தான். எனக்கு முப்பத்தொன்று வயசாகிறது; இருபது வருடக்கடுங் காவல் தண்டனை நடுவில் சாகாமல் இருந்தால் ஐம்பத்தொன்றில் தண்டனை தீரும். 'நிலா வெளிச் சத்தில் வெளியே விடப்பட்ட கோழி'யைப் போல நான் வெளி வருவேன். அன்று வீடு எங்கே? நாடு எங்கே? நரைத்த தலையோடு கூடிய கிழவன், ஒரு பீடி கூடக் கிடைக்காத சிறை வாழ்க்கை. இதோ, இப் போது கருப்புத் தொப்பி வைக்க வேண்டுமென்றும் வந்தாயிற்று. செத்தாலும் எனக்கு இஷ்டமில்லை பல்வலியோ இருக்கக்கூட முடியவில்லை. எப்படிப் பட்ட கஷ்டம்! அன்றைக்குத் தூக்கில் மாட்டியிருந் தாலும் பரவாயில்லை. இப்படிச் சித்திரவதைப் படுவதைவிடச் சாவது எவ்வளவோ மேல்!

குட்டன் ஒருவிதமாய் நேரத்தைப் போக்கினான். பல்வலியால் அவனுடைய கன்னத்தில் நீர்க்கட்டிப் பேசக் கூடக் கஷ்டமாகிவிட்டது. காலையில் கிடைத்த கஞ்சியைக்கூட அவன் ஒதுக்கி விட்டான். புத்தகம் பைண்டு செய்கிற இடத்தில்தான் அவன் வேலைக்குப் போய்க் கொண்டிருந்தான். அன்றைக்கு வேலைக்குப் போவதில்லையென்று தீர்மானித்தான் குட்டன். வார்டர் வந்து கைதிகளை வேலையிடங்களுக்கு ஏவினார்.

''எனக்கு இன்னைக்கு ஒண்ணும் முடியாது. என் வலது கன்னம் வெடிச்சுடும்போல வலிக்குது. ஜுரமும் இருக்கு'' உள்ளங்கையால் கன்னத்தை அழுத்திப் பிடித்துக்கொண்டு அந்தத் தீனன் சொன்னான்.

தலைமை வார்டர் வந்தார். குட்டனைச் சூப்பரிண்டிடம் கூட்டிச்சென்றார். அவர் முதல் மாடியில் மனோகரமான ஒரு மேசையினருகே அமர்ந்திருந்தார். சுழன்று கொண்டிருந்த விசிறி கிளப்பிய காற்று கன்னத்தில் படுகையில் அந்தத் தீனனுக்கு இன்னதென்றறியாத ஒரு சுகம் தோன்றியது. சூப்பரிண்டு ஏதோ ஃபைலைப் பார்த்துக் கொண்டிருந்தார். ஃபைலிலிருந்து பார்வையை எடுத்து அவர் சீஃப் வார்டரிடம் கேட்டார்:'' இவன் தானா குட்டன்...?...''

''எஸ்ஸார்!''

''என்னடா? நீ கருப்புத் தொப்பி வைக்க மாட்டியோ?''-சூப்பரிண்டு கேட்டார். குட்டன் மௌனமாய் நின்றான். அவனுக்கு நிறையச் சொல்வதற்கு உண்டு.

''நீ வைக்க மாட்டியோ, கருப்புத் தொப்பி?' சூப்பரிண்டு மீண்டும் கேட்டார். குட்டன் அதற்கும் மௌனமாகவே நின்றான். சூப்பரிண்டுக்குக் கோபம் வந்தது. அவர் தொடர்ந்தார்: ''டேய், ஒங்கிட்டத் தானே கேட்கிறேன்? ஒன் நாக்குத் தளர்ந்து போச்சோ?''

''கொண்டு வா, கருப்புத் தொப்பியை!''

அவர் சீஃப் வார்டருக்குக் கட்டளையிட்டார். வார்டர் கருப்புத் தொப்பியை நீட்டினார். சூப்பரிண்டு ருத்திரமாய் நோக்கியவாறு குட்டனிடம் சொன்னார்.

''வாங்கி வை தலையில்''

அதற்கும் அவன் நிச்சலனமாயிருந்தான். சூப்பரிண்டு தொடர்ந்தார்: ''ஊ ஊம்...வை, தலையில்! கள்ள ராஸ்கள்!! டேய், தொப்பியை வாங்கித் தலையில் வை!!''

சூப்பரின்டின் கட்டளையைப் புறக்கணிக்கிற கைதி நிச்சயமாய்த் துர்ப்பாக்யவானாயிருப்பான்.

''கொண்டுபோய் இவனை முக்காலியில் கட்டுங்கள்!'' பல்லைக் கடித்துக் கொண்டு அவர் தொடர்ந்தார்: ''பன்னிரண்டு அடி கொடுங்கள்!''—அவன் முக்காலியின் அருகில் தள்ளிச் செல்லப்பட்டான்.

நிச்சயமாய், தான் கள்ளனில்லை. அப்படியே இருந்தாலும்இப்போது ஒரு கொலைப்புள்ளிஆயிற்றே. இந்தக் கருப்புத் தொப்பி வைப்பதை விட மரணமே மேல். அவன் திரும்பத் திரும்ப அந்தத் தீர்மானத் திற்கு வந்து சேர்ந்தான்.

அந்தப் பகுதியிலிருந்த சக கைதிகள் அவனைப் பரிகாசம் பண்ணினார்கள். அவர்களில் சிலர்குட்டனிடம் கேட்டனர்: ''சும்மா எதுக்கு இரும்பைக் கடிச்சுப் பல்லை உடைச்சுக்கிறே? ஜெயிலுக்குவந்தாச்சுன்னா அப்புறம் அவங்க சொல்றதுதான் சட்டம். நீ மடையனா?''

''நாங்களெல்லாம் வைக்க மாட்டோண்டா கருப்புத் தொப்பி! கொலைகாரங்களுக்குச் செவப்புத் தொப்பியாக்கும். இந்தப் பயலுக சட்டத்தைக் கொண்டு போய்ச் சூட்டுத் தள்ளு.'' மற்ற சிலர் இந்

---

## தோட்டி

ஈக்களை, நேற்று விரட்டி
நீ படுத்திருக்கையில் மற்ற
குப்பைகளை வாரிப்போனேன்.

கடித்து மகிழ்ந்த கரும்புச் சக்கைகள்,
கால் பரப்பிக் கிடக்கும் பழத்தோல்கள்,
வாடிய இலைகள் இவற்றை விட்டு ஈக்கள்
உன்னை இன்று மொய்க்க, நீ அவற்றை
விரட்டவில்லை.

மூலையில்
வழக்கமாய் மாடுகள் நிற்க
நானும் நிற்க, வேலையும்
நிற்கிறது நடக்காமல்.

—ந. மகாகணபதி

தப் பக்கம் பேசினர்கள். பொதுவாகக் கைதிகளின் சம்பாஷணைக்குரிய விஷயமாய் அந்தக் கருப்புத் தொப்பி ஆயிற்று.

அங்கு கருப்புத் தொப்பிக்காரர்கள் நிறைய உண்டு. ஆனாலும் கருப்புத் தொப்பியைத் தலையில் வைப்பதற்கு அவர்களிடம் யாருக்குமே விருப்பமில்லை. அவர்கள் வேலையிடங்களில் இருக்கையில் அந்தத் தொப்பியை ஒளித்து வைப்பார்கள். அவர்களில் பலருக்கும் ஆயுளில் வந்து போன முதலாவது அபத்த மாயிருந்தது திருட்டு. கருப்புத்தொப்பி அவர்களைத் திருடர்களென என்றென்றைக்கும் முத்திரை குத்தி விடும் ஒரு திருட்டுக் குற்றவாளிஅவனுடைய குற்றத் தைப்பற்றி, ''நம்பிக்கைத் துரோகம்'' என்றல்லாமல் 'திருட்டு' என்று சொல்லிக் கொள்வதில்லை.

கருப்புத் தொப்பி தலையில் வைத்திருப்பவனிடம் யாருக்கும் மரியாதை இல்லை. அவர்களுக்கு நண்பர் களுமில்லை.

குட்டனை மீண்டும் சூப்பரிண்டினருகில் கொண்டு சென்றார்கள். வார்டரின் கையிலிருந்த கருப்புத் தொப்பியைச் சுட்டிக் காட்டிக் கொண்டு அம்முறையும் சூப்பரிண்டு சொன்னார்: ''டேய், மரியாதையா அந்த தொப்பியை வாங்கித் தலையில் வை. உம்...சீக்கிரம் ஆகட்டும் ''

''எஜமானே,''—முணுமுணுக்கும் குரலில் குட்டன் சொன்னான்:- ''நான் செவப்புத் தொப்பி வச்சுக் கிறேன். எனக்குக் கருப்புத் தொப்பி...''

''என்ன சொன்னே? நீ கருப்புத் தொப்பிவைக்க மாட்டே, இல்லே?''

''நான் கொலைக் கேசில் அல்லவா தண்டனை.''

''சீ, ராஸ்கல்! கொண்டு போய் இவனைத் தடி விலங்கு பூட்டு, வார்டர்! மூணு நாளுக்கு உப்பும், சோறும் மட்டுமே கொடுங்க, இவன் வைக்கிறானு இல்லையா என்று தெரியட்டும்.''

காலின் பெருவிரல்கள்மாத்திரம்தரையில் ஊன்றி யும், கட்டுப்பட்ட கைகளை ஆகாயத்தை நோக்கி உயர்த்தியும் தினத்திற்குக் குறைந்தது நான்கு மணி நேரத்திற்கு ஒரு யக்ஞம். ஆகாயத்திற்கு எழத் தொடங்கும் ஒருவன் கேவலம் கால் பெருவிரலினு டைய ஒரு சிறு ஸ்பரிசம் மாத்திரம் பூமியில் விட்டு வைக்கின்ற மட்டில்தான் இருக்கும் அந்த நிலைமை.

கருப்புத் தொப்பிக்காரர்கள் குட்டனைப் பரிகாசம் செய்தார்கள். அவர்களில் யாரையாவது கண்டால் கூட அவனுக்குத் தாங்க முடியாத வெறுப்பு உண்டா யிற்று. ஒரு முறை ஐந்தாறு வார்டர்கள் சேர்ந்து குட்டனுடைய கைகால்களைக் கட்டிப் போட்டு அவ னுடைய தலையில் கருப்புத் தொப்பியை வைத்தார் கள். அது அங்கே ஒரு மணி நேரமாவது தங்கா விட்டால் சூப்பரிண்டுக்கு அவமானம். குட்டனின் கை கால்கள் அவன் வசத்தில் இல்லை. அவனுடைய தலை யில மலையைப்போன்ற ஒரு பேரவமானம் உட்கார்ந்து அவனை உருக்குவதைப் போல அவனுக்குத் தோன்றி யது. கை கால்கள் சுதந்திரமடைந்தவுடன் முதலாவ தாக அவன் செய்தது அந்தக் கருப்புத் தொப்பியைத் தலையிலிருந்து பறித்து எறிந்தது தான்.

அன்று, பாயைவிரிப்பதற்காக, அறையைக்கூட்டி வாரும்போது அங்கே மூலையில் ஓரிடத்தில் ஒரு மோதி ரம் கிடந்தது. மின்னும் தங்க மோதிரம். தன்னைப் பிசாசைப் போல உபத்திரவம் செய்த ஆட்களுடைய அந்த மோதிரத்தை, சுவரின் அந்தப் புறமாக ஒரு எறி எறிய அவன் ஓரிரு முறை முயன்றான். ஆனால் அப்படிச் செய்யவில்லை.

பின்னால் ஒரு நாள் ஒரு வார்டர் குட்டனின் செல்லிற்கு ஓடிச் சென்றார். அவருடைய முகத்தை கண்டபோதுதான் குட்டனுக்கு விஷயம் புரிந்தது.

''என் மோதிரம் கிடைத்ததா?''— வார்டர் கேட் டார்

அந்தக் கருப்புத் தொப்பிக்காரனிடம் அவருக்கு நன்னம்பிக்கை உண்டாயிற்று.

அடுத்தநாள் சூப்பரிண்டு பரேடிற்குச் சென்ற போது, குட்டன் கருப்புத்தொப்பிவைத்திருக்கவில்லை. அவருக்கு அளவில்லாத கோபம் உண்டாயிற்று. அன்று ஐந்தாறு வார்டர்கள் சேர்ந்து குட்டனைப் பிடித்துக் கட்டித் தலைக்கு ஒரு 'திருகப் பிழிச்சல்' நடத்தினர்கள்.

கருப்புத் தொப்பி வைக்காமல் அவனுக்கு எது வும் இயலாமலாயிற்று. அதைத் தலையில் வைக்கவோ அவனுக்கு விருப்பமில்லை. இவ்விரண்டும் முரணு கின்றன.

அந்தக் கருப்புத் தொப்பிக்காரர்களின் வார்டில், தலையில் கருப்புப் புள்ளியுள்ள ஒரு பூனை வழக்கமாய் வரும். சில சமயம் அப் பூனை குட்டனருகிலும் செல் வதுண்டு. குட்டனுக்கு அந்தப் பூனையிடம் கொஞ்சங் கூடப் பிரியம் தோன்றவில்லை. அதன் தலையிலிருந்த கருப்புப் புள்ளி, ஒரு கருப்புத் தொப்பியின் சின்ன மென்று அவன் மனத்திற்குப் பட்டது. குட்டன் ஒரு முறை ஏதோ சிந்தனையில் மூழ்கி அப்படியே உட் கார்ந்திருந்தான்.

அந்தப் பூனைக்கு அவனருகில் யாதொரு வேலையு மில்லை. அது வாலைத் தூக்கிக் கொண்டு, வில்லைப் போல வளைத்துயர்த்திய உடலுடன் குட்டனுடைய காலில் உராய்ந்தது. கோபம் சகிக்க முடியாதவனுகிக் குட்டன் எழுந்து காலைப்பின்னால் மடித்து அதனுடைய அடிவயிற்றில் இழுத்து ஒரு அடி கொடுத்தான் 'பள்'ளென்று ஒரு சப்தத்துடன் அது சுவரில் மோதி அடிபட்டு விழுந்தது. அதன்பின் அந்தக் கருப்புத் தொப்பிப் பூனை, குட்டனருகில் வருவதில்லை.

குட்டனுக்குச் சரியான உணவில்லை; கறியில்லை; எண்ணெயில்லை. ஒரு பீடி குடிக்கக்கூட வசதியில்லை. தண்டனையை அவன் பிரத்யேகச் சிறையில் கழிக்க வேண்டும். என்னவானாலும் கருப்புத் தொப்பி வேண்டாமென்று அவன் நினைக்கிறான்.

'வொர்க் ஷாப்'பில் வேலை செய்து கொண்டிருந் தான் குட்டன். ஒரு கும்பலாக வார்டர்கள் அவனரு கில் வந்தனர். சூப்பரிண்டு பரிசோதனைக்கு வருகிறார். கருப்புத் தொப்பி இல்லாமல் அவனை விட முடியாது. பலவந்தமாய் அவர்கள் குட்டனின் தலையில் கருப்புத் தொப்பியை வைத்தார்கள். சூப்பரிண்டு போனபிறகு குட்டன் அதை நீக்கினல் அவர்களுக்கு ஆட்சேபணை யில்லை. குட்டனின் தலையில் கருப்புத் தொப்பி இருக் கிறது. அவனுடைய கூட்டாளிகள் அவனைப்பார்த்து முகத்தைத் திருப்பிக் கொண்டு சிரித்தார்கள். அந்தத் தொப்பி தலையில் ஏறியது முதல் அவனுடைய முகம், ஏதோ ஒரு பெரும் பாரத்தைத் தாங்குவது போலத் தாழ்ந்து போயிற்று.

சிறையைப் பார்க்க வந்த சில உறவுக்காரர்களு டன் சூப்பரிண்டு அந்தப் பிரதேசத்தில் சுற்றித் திரிந்து கொண்டிருந்தார். அவர் ஒரு முறை சுற்றி வந்தார். அவருடைய உறவுக்காரர்கள், காட்சியி லுள்ள ஆர்வத்துடன் சஞ்சரித்தனர். வேலை செய்து கொண்டிருந்த குட்டன், கருப்புத் தொப்பியின் பாரத் தால் தாழ்ந்து போயிருந்த தன் முகத்தை உயர்த்தி

நாற்புறமும் ஒரு முறை நோக்கினான். சூப்பரிண்டு அவனருகில் வருகிறார். அவனுக்கு அது மிக்க சந்தோஷத்தைக் கொடுத்தது. அவருக்கு மரியாதை செய்யும் முறையில் குட்டன் எழுந்தான். குட்டனுடைய தலையில் கருப்புத் தொப்பி இருந்து வேகிறது. சூப்பரிண்டு குட்டனை நோக்கிப் பரிச்சயமான பார்வையைச் செலுத்தினார். அவர் அப்படியே அவனருகில் சென்றார். குட்டனுடைய கை, முன்பே தீர்மானித்துப் பத்திரப்படுத்தி வைத்திருந்த பரிசுடன் உயர்ந்தது. பின்னர் அந்த உத்தியோகஸ்தரின் மார்பில் போய்க் குதித்தது. ஓரிரண்டு நிமிடங்கள்!! அந்தக் கருப்புத் தொப்பிக்காரன் பிரபலமானவனானான்.

களைப்புற்று வீழ்ந்த சூப்பரிண்டின் மார்பில் அவன் அந்தக் கருப்புத் தொப்பியை வீசி ஒரு உதை கொடுத்தான்.

டெலிஃபோன் அலறியது போலீஸாரால் அந்தக் கைதி வளைத்துக் கொள்ளப் பட்டான். அவர்கள் பீதியுடன் நின்றிருந்தார்கள். கைகளை நீட்டிக் காட்டியவாறு குட்டன் சொன்னான். "இல்லை, உங்களோடு எனக்கு விரோதமில்லை. விலங்கு மாட்டணுமானால் மாட்டிக்குங்க."

கொலைகாரனாகிய குட்டன் நல்லவனாக வேண்டியிருந்தது. ஆனால் அவன் மீண்டும் கொலைகாரனானான்.

அவன் கணக்குப் போட்டான்: "முப்பத்தியொண்ணு, முப்பத்தியொண்ணும் இருபதும் அம்பத்தியொண்ணு. இதோடு இருபதைக் கூட்டு. அம்பத்தொண்ணும் இருபதும் எழுபத்தொண்ணு. எழுபதாவது வயசு!! இனிமேல் என் மண் இங்கேதான். நான் இந்த மண்ணில் தான்."

ஒரு முறை கக்கூஸிலிருந்து திரும்பி வந்த குட்டன் வார்டரிடம் அறிவித்தான் "இனிமேல் அறைக்குள் போக எனக்கு மனஸில்லை." சிறையின் முன்பு கோபமற்றவனைப்போல அவன் அமர்ந்தான். வார்டர்களிடமிருந்து விவரம் அறிந்த ஜெயிலர் குட்டனருகில் சென்றார் அவன் கலங்கவில்லை. ஒரு நண்பனிடம் சொல்வதைப் போல அவர் சொன்னார்: "குட்டா, இதிலே என்ன மோசம்? சேச்சே, அறைக்குள் போ" அவனுடைய நன்மையையே விரும்பும் ஒருவரின் நட்பு நிறைந்த தொனியாயிருந்தது அது. குட்டன் நிசப்தமாயிருந்தான். சுமார் இருபது வார்டர்களுடைய துணையுடன் ஜெயிலர் மீண்டும் சொன்னார்: "சீ குட்டா, எழுந்திருப்பா!"

சட்டென்று முகத்தைத் திருப்பி ஜெயிலரை நோக்கிக் குட்டன் சொன்னான்: "எனக்கு மனஸில்லை!" அந்தச் சப்தத்திற்கு மிக அதிகம் மதிப்பிருந்தது. எழுபது வயதுவரைச் சிறையில் கழிக்க வேண்டிய ஒருவனுடைய இதயம் அந்த வாக்கியத்தில் ஒலித்தது ஒரு கொலைகாரனுடைய மரத்துப் போன இதயம் அதில் பிரகாசித்து. வாழ்க்கையினால் இனிப் பயனில்லை என்று உணர்ந்து கொண்ட ஒரு துர்ப்பாக்யசாலியின் உறுதி அதில் வெளிப்படையாக்க் கலந்தது வாழ்க்கையைப் பற்றி ஒரு தீர்மானம் அவனுள் உறைந்து விட்டபோது எந்த ஒரு சட்ட வரம்புகளுக்குள்ளும் அவனை உட்படுத்த முடியவில்லை.

அவன் திரும்பவும் சொன்னான்: "எனக்கு மனஸில்லை!"

மலையாளம் : பொன்குன்னம் வர்க்கி

தமிழில் : ம. இராஜாராம்

# அக்கம் பக்கம்

"நம் தேசத்தார்கள், 'நாவல், நாவல்' என்று சொல்லுகிறார்கள்! அதில் என்ன ருசி? அதுவும் ஒரு கதைதானே! என்று இங்கிலீஷ் படித்தவர்களைக் கேட்பார்கள். இவ்வாறு இங்கிலீஷில் அப்பியாசமில்லாத நம் நாட்டவர்கள் நாவல் என்பது எவ்வாறு இருக்கலாம் என்பதை ஒருவாறு அறிந்துகொள்ளும் பொருட்டு, தமிழில் ஒரு நாவல் எழுதிப் பிரசுரம் செய்கிறோம். 'நாவல்' என்பதின் அர்த்தம் புதுமை என்பதாம். அவ்வாறே இக்கிரந்தம் புதிய நடையில் எழுதப்பட்டிருக்கும் கதையானபடியால் 'நாவல்' என்ற பெயர் இதற்குக் கொடுக்கப்பட்டிருக்கிறது. நமது 'தீனதயாளு'தான் தமிழின் முதல் நாவல்" பண்டித நடேச சாஸ்திரி 1902-இல் இப்படி எழுதியிருக்கிறார். இவ்வளவு தெரிந்திருக்கும் நடேச சாஸ்திரிக்கு இதற்கு முன்பு வெளியான நாவல் பற்றி ஏதும் தெரியாதது ஆச்சரியமாக இருக்கிறது.

* * *

சென்னை இலக்கியச் சிந்தனைக்கு ஓர் ஆண்டு பூர்த்தியாகிறது. தலைவர், செயலாளர், பொருளாளர், சந்தா, இத்யாதிகளெல்லாம் இல்லாத சங்கம் இது. பத்திரிகைகளில் வெளிவரும் சிறுகதைகளை மதிப்பிட்டுப் பாராட்டுவது இதன் இலட்சியம்.

மாதாமாதம் பத்திரிகைகளில் வெளியாகும் சிறுகதைகளை, எழுத்தாளர்களைக் கொண்டு மதிப்பிடச் சொல்லி அவர்கள் தேர்ந்தெடுக்கும் சிறந்த சிறுகதைக்குச் சன்மானம் அளிக்கிறது இலக்கியச் சிந்தனை. இப்படித் தேர்ந்தெடுக்கப்பட்ட பன்னிரண்டு சிறு கதைகளின் தொகுப்பு தமிழ்ப் புத்தாண்டன்று வெளியிடப்படுகிறது. பேராசிரியர் அ. சீனிவாசராகவன் சிறந்த பன்னிரண்டு சிறுகதைகளையும் மதிப்பிட்டு 1970 இன் சிறந்த சிறுகதையைத் தேர்ந்தெடுப்பார். சீனிவாசராகவனுக்கு வேலைமிச்சம். பன்னிரண்டு கதைகளைப் படித்துவிட்டுத் தமிழ்ப் பத்திரிகைகளில் வெளியான ஓராண்டிற்கான சிறந்த சிறுகதையைத் தேர்ந்தெடுத்துவிடுவார்.

கடைசியாக ஒரு வார்த்தை. 'கசடதபற' வில் 'அக்கம் பக்கம்' ஒரே ஒரு பக்கம் தான். (அது கூட இந்த இதழில் அரைப் பக்கமாகி விட்டது) சிலர் தங்கள் கோபம் முழுவதையும் இந்த ஒரு பக்கத்தின் மீதே செலுத்துகிறார்கள். இந்தக் கோபம் அவர்களை மற்ற பக்கங்களைப் பார்க்க விடாமல் தடுக்கிறதா என்ன.

நா. கிருஷ்ணமூர்த்தி

Published by N. Mahaganapathy 47, Nallathambi Mudali Street, Madras-5. Printed by M. K. Swamy at Prem Press, 8, M. K. Amman Koil St., Madras-4. Edited by N. Krishnamoorthy No. 1, Devadi